ஞாயிறு வெளியீடு    ஆண்டு சந்தா ரூ. 5    தனிப்பிரதி 0—1—3    REGD. No. M. 4848




மலர் 4    காஞ்சிபுரம் 10—3—1946    இதழ் 47

# மகாத்மாவால் கிடைத்த அனுபவம் மகா பெரிது!

(கைவல்யம்)

மகாத்மா என்றால் என்ன? யார்? எப்படி இருக்கவேண்டும்? அவர் சக்தி என்ன? எதைச் செய்வார்? எதைச்செய்து கொடுப்பார்? என்கிற விஷயங்களை ஆலோசித்துப் பார்க்கவேண்டும். மகா என்றால் பெரியது, ஆத்மா என்றால் ஜீவன், மகாத்மா என்றால் பெரிய ஜீவன் என்பது அர்த்தம். மகாப் பிரபு, மகா வித்வான், மகா வீரன், மகா சிற்பி, மகா உபாத்தியாயர், மகா போக்கிரி, மகா துஷ்டன், இவர்களெல்லாம் அவரவர்கள் தொழிலில் விசேஷப்பட்ட பெரியவர்களான தினுல் மகா என்பதை முன்னால் வைத்துச் சொல்கிறோம். அது போலவே நமது மகாத்மா காந்தி அவர்களும் இராஜ்ய விஷயத்தில் பெரியவராகஇருப்பதால், மகாத்மா காந்தி என்று சொல்லுகிறார்கள். எல்லா விதமகாத்மாக்களும் தங்கள் ஆலோசனா சக்தியாலும், பிரயத்தனங்கள் [illegible] களேயல்லாமல், அவர்களுக்காக ஒரு கடவுள் சக்தியோ, ஒரு கடவுளோ அவர்கள் ஆத்மாக்களில் புகுந்துகொண்டிருக்கவில்லை. எல்லாஜீவர்களின் ஆத்மாக்களுக்குள்ளும் எந்தக்கடவுள் புகுந்துகொண்டிருக்கிறதோ அந்தக்கடவுள்தான் அவர்கள் ஆத்மாக்களிலும் இருக்கிறது.

எல்லா நாட்டிலும் மகாத்மாக்கள் உண்டு. அவர்களுடைய சிந்தனா சக்தியின் உயர்விற்கும், புத்தியின்மேன்மைக்கும்மக்கள்மதிப்புக் கொடுப்பார்கள். நமது நாட்டில் அதோடு நிற்கமாட்டார்கள். கடவுள் அவதாரமென்றும், அருள் பெற்றவர் என்றும், கடவுளைப் பார்த்தவரென்றும், கடவுள் கூடப் பேசுகிறவரென்றும், வரப்பிரசாதம் கொடுக்கிறவரென்றும் கற்பித்துக் கொள்வார்கள். இதற்குக்காரணம், நமது ஜன சமூகத்துக்கு ஆலோசித்துப் பார்க்கும் புத்தியில்லாக் குறை மட்டுமல்ல, நம்முடைய சமய சம்பந்தமான எல்லாம் அப்படியே இருப்பதால்தான். அதன்படியே சாஸ்திர பண்டிதர்களெல்லாம் பிரசாரம் செய்தார்கள், இன்றும் செய்கிறார்கள். அப்படிச் செய்வதே நமது உயர்ந்த சாதிகளுக்கும், படித்தவர்களுக்கும் அனுகூலமாக இருக்கிறது. அந்த மனோபாவத்தை மேற்கொண்ட பழக்கமும், அந்தச் சம்பிரதாயத்தை ஒட்டின மூடபக்தியும் நம்நாட்டு பூமியில் பல நூற்றாண்டுகளாகத் தகாத வெறுப்புகளும், அவற்றினும்கொடியதான உணர்ச்சியற்ற தன்மையும் நிறைந்து நிற்கின்றன. அதனால் அறிவின் வேர்கள் அழிக்கப்பட்டன. நமது நாட்டில் அறிவு பொதுவல்ல; தனி ஒரு ஜாதிக்கே உரியது; மற்றவர்களுக்குக் கிடையாது என்று அறிவின் ஆணிவேரையே அறுத்துவிட்டார்கள். மானிட சமூகம் அதனுடைய நன்மைக்காக வேலைசெய்யக்கூடாதென்று அரச சிம்மாசனம் சொல்லுகிறது. அப்படியே புரோகிதனும் அந்த மானிட ஜாதியானது தனது நன்மையை முன்னிட்டுச் சுயமாகச் சிந்திக்கக்கூடாதென்று சொல்லுகிறான். ஒன்று கைகளுக்கு விலங்கிடுகிறது, மற்றொன்று ஆத்மாவிற்குவிலங்கிடுகிறது. இந்த இரண்டு விலங்குகளுக்கும் மத்தியில் மானிடஅறிவு வளரவேண்டும்.

மகாத்மா என்றாலே ரிஷிகள், முனிவர்கள், கடவுள்அருள்பெற்றவர்கள், கடவுள்பக்கம் இருப்பவர்கள், நேரில் தெரிந்தவர்கள்முதலியவர்களாக நினைக்கவே நாம் பழக்கப்பட்டிருக்கிறோம். நமது சாஸ்திர இதிகாச புராணங்களில் நாம் தெரிந்த ரிஷிகள் அநேகர் முயல், நரி, கும்பம், மான், பாம்பு முதலிய ஜந்துக்களிடம் உண்டானவர்கள். இவர்கள் கற்பனை ரிஷிகள் என்று நமது பண்டிதர்களுக்குக் கூடத்தெரிவதில்லை. உண்மையாக இருந்த ரிஷிகள், மகாத்மாக்கள் அறிவின் வியாபகத்திலும், சில ஒழுக்கங்களிலும் நமக்கும் அவர்களுக்கும் வித்தியாசமேயல்லாமல் மற்றவை எல்லாம் ஒன்றேயாகும். கதைகளில் வரும் மகாத்மாக்களெல்லாம் சமுத்திரத்தைக்குடித்தார், மலையை அழுத்தினார், தேவர்களைச்சபித்தார், எலும் பைப்பெண்ணாக்கினார், பெண்ணை முதலையாக்கினார் என்று வர்ணித்தார்கள். இப்பொழுதுள்ள மகாத்மாகாந்தி அவர்களை அப்படிவர்ணிக்கமுடியவில்லை. ஏனெனில், முன்சொன்ன அரச, புரோகித ஆகிய இவ்இரண்டு விலங்குகளுக்கும் மத்தியில் அறிவு என்னும்கழுகுபறக்கப் புறப்பட்டிருக்கிறது. அந்தக்கழுகு, கற்பனையும் பொய்யுமான அழுகி நாற்றமெடுத்துக்கிடக்கும் பிணத்தையெல்லாம் தின்றும், வீசிஎறிந்தும் வருகிறது. கற்பனை மகாத்மாக்களுடன் மகாத்மாகாந்தி அவர்களைச் சேர்த்து நினைக்க இப்பொழுது வேறு மாதிரியாகவர்ணிக்கிறார்கள். வலதுபக்கம் படுத்தார், தூங்கினார், இடதுபக்கம் எழுந்தார், ஆச்சரியப்பட்டார், சிரித்தார், பரிகாசம்பேசினார், சாப்பிட்டார், உட்கார்ந்தார், பட்டினிஇருந்தார் மௌனமிருந்தார் என்பவைகளைப்போன்ற அவருடைய நித்திய ஏற்பாடுகளைச் சன சமூகத்துக்கு ஆச்சரியமாகவும், அதிசயமாகவும் படும்படியாகப்பத்திரிகைகள் எழுதிக்கொண்டு வந்தால் கற்பனை மகாத்மாக்களுடன்மகாத்மா காந்தியும் ஏன் சேரமாட்டார்? அப்படிச்சேர்த்துவைத்திருக்கவேண்டுமென்பதுதானே நமதுநாட்டுப்புத்திசாலிகளின் எண்ணமும். அப்படிச் சேர்த்து வைத்திருந்தால்தானே உழைப்பாளியின் தோளில் வெகு சுலபமாய் ஏறிக்கொள்ளலாம். உண்மை உழைப்பாளிகளின்உழைப்பின்பலனை அனுபவிப்பதே நமது நாட்டுப்புத்திசாலிகளுக்குமேலான தொழில். தெய்வத்தின் பெயர் சொல்லி மனிதனை மனிதன் அடக்கி ஆளுவதும், மகாத்மாக்களை முன்நிறுத்திச்சுகவாழ்வு வாழ்வதும் நமது நாட்டு அனுபவம். அந்த அனுபவங்கள் ஒருபுறம் இருக்கட்டும். இப்பொழுதோ பெரிய அனுபவத்தைமகாத்மாகாந்தி அவர்கள் காங்கிரசில் போட்டுவிட்டார், இது இதிகாசபுராண அனுபவமல்ல. முன்னால்நிற்கும் அனுபவம். எந்தப்புத்திசாலியும் அடித்துத்துடைத்து ஆண்மைபேசும் அனுபவமல்ல. பேனைதைமறந்துவிடுவோம். இனிமேல் ஒற்றுமையாக இருந்து நடக்க வேண்டிய காரியத்தைப் பார்ப்போம் என்று தந்திரமாக ஏமாந்து நிற்கவைக்கும் பேச்சால் பதியவுங்கிப்போகும் மனமுடைய [illegible] அனுபவம். இந்த அனுபவம் எல்லாருக்கும் முன் நிற்பதுபோலவேபார்ப்பனர் முன்னாலும் நிற்கிறது. அவர்களில் மேதாவிகள் உண்மைக்கு ஏன் பரிந்து பேசவில்லையென்றால், ரிஷிகளென்றும், முனிவர்களென்றும், மகாத்மாக்களென்றும் கற்பிக்கப் பட்ட பீடங்களிலிருந்து தான் அவர்கள் விவகாரங்கள் புறப்படுகின்றன. உண்மைக்குப் பரிந்து பேசினால் அந்தப்பீடங்கள்பொய்யாகிவிடுமென்பது அவர்களுக்குத் தெரியும். அதுமட்டுமல்ல, ஒரு கூட்டம் முழுதும் சேர்ந்து யாதேனும் ஒருகுறுகிய நோக்கத்திற்குத் தம்மைப்பயிற்சி செய்துகொள்ளுமாயின் பிறகு அதையே தளரவிடாமல் காத்து, அதற்கு உண்மை செலுத்த வேண்டுமென்பதும், செலுத்துவதும் அந்தக் கூட்டத்திற்கு லாபகரமாகிறது. இந்தப் பயிற்சியே ஜாதியக் கொள்கை. அது ஜனங்களுடையஉள்ளத்தைக் கவரும்போது தர்மக்குறைவையும், குருட்டறிவையும் உண்டாக்குகிறது. இந்த ஜாதியக்கொள்கையின் காலம் பிரமாண்டமான சுயநலமும் செருக்கும் தலைப்பட்டகாலம். இந்தக்குணத்தைத்திருப்திசெய்யும் பொருட்டுச் சாசுவதமான வேலை செய்வோர் இனி வரப்போகிற உண்மையான விடுதலை காலத்திற்குத்தகுதியில்லாதுபோவார்கள். இந்தக்குற்றந்தான் இராசகோபாலாச்சாரியாரின்மேல் சுமத்தப்படுகிறது.

மனிதனுடைய உத்தமலட்சியம்பிறர்நலம். ஆனால்ஜாதி, தொழில் முறையை உடையதால் அதற்குத் தக்கபடியே அவன் உத்தமலட்சியம் தன்நலமாகிறது. பார்ப்பன ஜாதித்தொழில்முறை ரிஷிகளையும், மகாத்மாக்களையும் உண்டாக்கி வைத்துக் காப்பாற்றும் தொழில் நடத்துவது. இதை உங்களுக்குஇப்பொழுது முன்னாலிருக்கும் ஒரு அனுபவத்தால் எடுத்துக்காட்டுகிறேன்.

மதுரைப்பக்கத்திலிருந்து ஒருபார்ப்பனப்பையன் பள்ளியை விட்டுத் திருவண்ணாமலைக்கு வந்தான். பட்டினியாகக் கிடந்தான். அவனைப் பார்த்த தமிழ்ப்பரதேசிகள் ஆதரித்தார்கள், வளர்ந்தான், வயதாயிற்று. பிறகு தமிழ்ப்பரதேசிகளைத்தன் காரியத்திற்கு உபயோகப்படுத்திக் கொண்டான்; மடமாச்சு; சொத்தாச்சு; மகாத்மா ஆனார்; ரிஷியானார்; மடமும்சொத்தும்ரிஷியுடையதா? பொதுவானதா? என்றநியாயம் வந்தது. கோர்ட்டில், தான் சம்பாதித்ததுதனக்கேஎன்று ரிஷிசொல்ல சொத்துப் பூராவும் ரிஷிக்கே ஆயிற்று; ரிஷி, தன் தம்பியைமடாதிபதியாக்கிச் சொத்தையெல்லாம் தன் தம்பிக்கே எழுதி வைத்துவிட்டார். அவர் தான் திருவண்ணாமலை ரமணமகரிஷி என்று விளங்குகிறார். பார்ப்பன பத்திரிகைகளும், எழுத்தாளர்களும் போற்றிப்புகழ்கின்றன. ஏன்? அது அவர்கள் ஜாதித்தொழில். பொய்யாக நடித்துப் பொருள்சேர்த்துத் தம்பிக்கு எழுதிப் பார்ப்பனமடமாக்குவதுதான் ரிஷித்தன்மையா? இப்படியேதான் ரிஷிகளும், மகாத்மாக்களும். உண்மையைக் கண்டவர்கள் தான் ரிஷிகள் மகாத்மாக்கள் என்று சொல்லுகிறார்கள். நமது மகாத்மா வார்தாவிலிருந்து உண்மைச்சுடரைக் கொளுத்தினார். அது இங்கே புகையாகச்சூழ்ந்தது. அந்தப்புகை கண்ணைக் கெடுத்துவிடுமோ என்று பயந்து குப்புறப் படுத்தார்கள் சிலர், படுப்பார்கள் சிலர், அது எப்படியோ போகட்டும். பின்னால் வருவதைமுன்னாலே சொல்லும் சிந்தனைசக்தி ஈ. வே. ரா. பெரியார் அவர்களுக்கு இருக்கிறதென்பதைஇந்தச்சம்பவமும்காட்டுகிறது. எப்படியெனில் தென்னாட்டுக்காந்தியப்பிரசாரம் சந்தி சிரிக்கும் நாள் தூரத்தில் இல்லை. அதை மக்கள் உணர்ந்துகொண்டு தங்கள் தவறுக்கு வருந்தும் நாளும் தூரத்தில் இல்லை என்றார்.

இத்தனைக்கும் காரணம் நமது நாட்டில் கற்பனைரிஷிகளையும் காரியத்திற்காக மகாத்மாக்களையும் புத்தியும், படிப்பும் சிருஷ்டித்ததேயல்லாமல் மக்கள் அனுபவத்திற்கு வேண்டிய அறிவைச் சொல்லிக் கொடுக்கவில்லை. முகம்மதியர் அரசாள ஆரம்பம் செய்வதற்குமுன் குராஸான் தேசத்திய ஆல்பிருனி என்பவர் தேசமெங்கும் யாத்திரை செய்து நமது தேசத்திற்கும் வந்தார். அவர் கல்வி கேள்விகளில் சிறந்தவர். அவர் சமஸ்கிருதக்கலைகளைப் பயின்று நமது சாஸ்திரங்களையும் மக்களையும் செவ்வையாகத் தெரிந்து கொண்டார், இந்தக்

அடுத்த பக்கம் பார்க்க

# ★ அடிமையை ஒழித்த ஆபிரகாம் லிங்கன் ★

[நெடுஞ்செழியன்]

மக்கள் நடமாட்டமில்லாத சிற்றூர். ஆங்காங்கு இடம்விட்டுச் சிதறுண்டுகிடக்கும் சிறுசிறு குடிசைகள். அவற்றிலிடையே குடிசைதோறும் நுழைந்துசெல்லும் மனித உருவம். மேலுடையும் கீழுடையும் இல்லாமல் அளவுகுறைந்து ஆறு அங்குலமாக இருக்கும் கால் சட்டையை அணிந்த நீண்டு வளர்ந்த வனப்பற்ற தோற்றம். கையிலே தபாற்கடிதங்கள் நிரம்பிய வைக்கோல் தொப்பி. இவ்வாறு தன் தோற்றத்தைப்பற்றிக்கவலைகொள்ளாது பாடுபடும் பாட்டாளிபோலவும், வன்னிலத்திற்கேற்ப வாழ்க்கையை அமைத்துக்கொண்ட வல்விளைஞன் போலவும் காணப்படுகின்ற அந்த உருவம் யார்? ஏர் பிடித்த கையாலே பின் கோலேந்திய கொற்றவன்! ஆம்! மிடியிலே தோன்றி ஏடறியாது நாடறிந்து, பட்டம் கல்வி பெறாது பாராளும் மன்றம் ஏறி நாட்டுத் தலைவனான ஆபிரகாம் லிங்கன்! பின்னால் அமெரிக்க-குடியரசின் பதினாறுவது தலைவனாக ஆகப்போகும் ஆபிரகாம் லிங்கன்தான்! மக்கள் நெருங்க அருவருக்கும் அழகற்ற உருவம் என்றாலும், அறிவு விதையை அமெரிக்க நாட்டிலே தெளித்து அறுவடை கண்ட ஆண்டகை. வாஷிங்டனுக்குப் பிறகு அதுகாறும் கண்டறியாத தண்டுமணியைக் குப்பைமேட்டிலே கண்டது அமெரிக்கா. ஆபிரகாம்லிங்கனை அமெரிக்கா மறக்கமுடியாது. அமெரிக்காவுக்கு ஆபிரகாம்லிங்கன் செய்த செயற்கரிய செயலைவிட மிகவாக எந்த அமெரிக்கத் தலைவனும் இதுகாறும் செய்ததில்லை. கிழக்கும் மேற்கும் என்றும், வடக்கும் தெற்கும் என்றும் பிளவுபட்டுப் பிரிந்துபோக இருந்த அமெரிக்காவை 'சேர்ந்த நாடுகள்' (United States) என்ற நிலை ஏற்படும்படி உறுதிப்படுத்திய பெருமை லிங்கனைச் சாரும். பண்பிலும் பழக்கத்திலும், நீதியிலும் நேர்மையிலும், அறிவிலும் தெளிவிலும், முயற்சியிலும் உயர்ச்சியிலும் புகழுடைந்த பெரியோர்களின் பெயர்கள் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படும்போது எந்தப் பெயரும் ஆபிரகாம் லிங்கனைக் காட்டிலும் மிக்க ஒளியை உமிழாது.

ஏழ்மையிலே பிறந்து, உழைப்பால் உயர்ந்து, ஏற்றம் அடைந்து தங்கள் புகழொளியைப் பாரெங்கும் பரப்பிய பெரியோர்கள் பலர் இருந்திருக்கிறார்கள் என்றாலும், அவர்களில் பெரும்பாலோர் ஏடு வழிகாட்ட ஏற்றம் அடைந்தோராவர். ஆனால் லிங்கனின் ஏற்றத்திற்கு இளமையில் அத்தகையவாய்ப்பும் ஏற்படவில்லை. பொன்விளைந்து பொருள் துவியும் அமெரிக்காவில்தான் ஆபிரகாம் லிங்கனுக்கு ஏடு பயில ஏதுவில்லை. விஞ்ஞானம் வளரத்தொடங்கிய நூற்றாண்டில்தான் பள்ளிபுகவழியேற்படவில்லை அந்த அளவுக்கு ஏழ்மை லிங்கனைத்தழுவியது. அவன் தந்தையோ- தன் பெயரையேஎழுத்துக்கூட்டத்தெரியாத அளவுக்கு எழுத்தறிவில்லாதவன். வாழ்க்கை நடாத்திய இடமோ வன்புலம். உலகம்போற்றும் குடியரசு நாட்டுத் தலைவன் பிறந்தஇடம் குச்சிவீடு. கற்பாறையைச் செதுக்கிக் காடுமுரடாக அமைத்திருந்த தளமும், கண்ணடிக் கதவின்றிக் கழிகளால் ஆன சாளரமும் அமைந்தவீட்டில்தான் ஆபிரகாம் லிங்கன் 1809ம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 12-ம் நாள் கெண்டகி மண்டலத்தில் பிறந்தான். விலைபோகாத வன்புலத்தை விலையில்லாது அல்லது மிக்கக் குறைந்த விலைக்கு வாங்கி உழுது பயிரிட்டு வளமுள்ள நிலமாக்கி அதனை விற்றுப் பொருளீட்டும் தொழிலை நடாத்திய தந்தைக்குப் பிறந்த தனயன் எப்படி ஏடுபயில இயலும்? கெண்டகி மண்டலத்தில் பண்படுத்திய பழனியைப் பத்து டாலருக்கு விற்றுவிட்டு வேறோர் களர் நிலத்தை வாங்க முயன்றான் லிங்கனின் தந்தை. ஓடம் மூலம் இடம்விட்டு பெயரும்போது விஸ்கிப்பீப்பாக்களும், வீட்டுப்பொருள்களும் ஆற்றின் வெள்ளப் பெருக்கால் கவிழ்க்கப்பட்டன. தேவையான பொருள்களை மட்டும் வாடகைக்குப் பெற்றுக்கொண்டு லிங்கனும் அவன் அருமைத் தங்கையும் தாய் தந்தையரோடு ஒரு வாரம் கால் நடையாக காடு கடந்து சென்று புதர் மண்டியிருந்த புது நிலத்தில் குடியேறினார்கள்.

"கொடிது கொடிது வறுமை கொடிது ..................... அதனினுங் கொடிது இளமையில் வறுமை" என்பதற்கிணங்க வறுமை லிங்கனின் இளமையையே வாட்டியது. ஏழை வீட்டில் பிறந்தவன் ஏழ்மையிலேயே இருந்து உழலவேண்டும், பிரபுக்கள் வீட்டில் பிறந்தவன் பிரபுவாகவே மதிக்கப்படவேண்டும் என்று பிறவியின்மேல் ஏற்படுத்திய ஏற்பாடு எங்ஙனம் லிங்கனைக் கட்டுப்படுத்தாமல் இருந்திருக்கும்? புதிய நிலத்தில் சிறு குச்சி வீடு கட்டும் தொழிலில் ஈடுபட்டிருந்த தந்தைக்கு வீட்டின் முன்றிலில் நின்ற மூங்கிலை வெட்டிக் கழிகளாகச் செதுக்கிக் கொடுத்தான் லிங்கன். செதுக்கிய பாறையின்மேல் விரித்த தோல்தான் லிங்கனின் படுக்கை. குடி நீர் கொண்டுவர ஒரு மைல் போகவேண்டும். அதையும் இளைய லிங்கனே செய்ய வேண்டியிருந்தது. பள்ளிக்கூடம் இரண்டு மைல் தொலைவில் இருந்தது. பள்ளிக்குச்சென்றான் என்றாலும்படிக்கஓய்வில்லை. இரைதேடக் கோடரியோ துப்பாக்கியோ ஏந்திப் பகல் முழுதும் வேட்டையாடி அந்தியில் குடிசை திரும்புவான். வெயிலிலும் மழையிலும் இயற்கை அன்னையால் தாலாட்டப்பட்ட இளைய லிங்கன் நாளடைவில், உருமாறினான். தன் அன்னை கொஞ்சி முத்தமிடவேண்டிய கையும், கன்னமும் மறத்து வனப்பிழந்திருந்தன.

லிங்கன் ஒன்பது ஆண்டு இளைஞன். அவன் அன்பிற்குரிய அருமை அன்னை இறந்துபட்டாள். பக்கத்தில் ஐம்பது மைல் தொலைவிற்குள் மருத்துவர் இல்லை. மருத்துவம் செய்ய இயலாமல் அன்னையை இழந்தான். அதைப்பற்றி வேறு யாரும் கவலை எடுத்துக்கொள்ளவில்லை. உழவன் மகன் லிங்கன் தானே அன்னையை இழந்தான். லிங்கனின் அழுகுரல் அண்டை வீட்டுக்கோ, ஆடல் பாடல்களில் ஈடுபட்டிருக்கும் கனதனவான்களுக்கோ, சீமான்களின்செவிக்கோ எப்படி எட்டும்? பிரபுக்கள் வீட்டு நாய்நோய்வாய்ப்பட்டால்நூறு மைலுக்கு அப்பாலிருந்து மருத்துவர் வருவர். லிங்கன் உழைக்கும் ஏழைதானே! அவன்தான் கொஞ்சுதலுக்குரிய குக்கலல்லவே. இறந்துபட்ட அன்னையின் உடலை எடுத்துச்செல்ல கரடு முரடான சவப்பெட்டியைச் செய்யத் தந்தைக்கு ஒத்துழைத்தான். இறுதிக்கடனாற்றப்பாதிரியார்ஒருவரும் கிடைக்கவில்லை. அவன் தான் பாட்டாளியாயிற்றே! எப்படி எளிதில் கிடைக்கக்கூடும். தந்தையின் வேண்டுகோளுக்கிணங்கி எழுபது மைலுக்கு அப்பாலுள்ள ஒருபாதிரியாருக்கு, வாழ்க்கையிலேயே வரைந்த முதல் முடங்கலை அனுப்பி வரவேண்டினான். பாதிரியாரோ போக்குவரத்து எளிதில் முடிக்க இயலாத அந்த நாளில் மூன்று திங்கள் கழித்துவந்தார். அன்னையைப் புதைகுழிக்கு எடுத்துச் செல்லத்தந்தையும், மகனும் அன்றி வேறுயாரும் உடன் வருவதற்கில்லை.

லிங்கன் தனது பத்தாவது ஆண்டைக் கழித்தபிறகுசாளரத்திற்குக் கண்ணடிக் கதவு அமைந்த வீட்டில் முதன்முதலாக வாழ வாய்ப்பு ஏற்பட்டது காரணம் மூன்று குழந்தைகளோடு கூடிய விதவையை லிங்கனின் தந்தை இரண்டாவதுதடவையாக மணந்துகொண்டதாலாகும். அவள் குடிசையை வீடாக ஆக்கித்தந்தாள். மாற்றாள் பிள்ளைகளிடத்து எப்பொழுதுமே சீறிவிழுவது என்பது சிற்றன்னைகளின் இயல்பாக இருக்க, லிங்கனின் சிற்றன்னை அதற்கு மாறுபட்டு விளங்கினாள். இருள் சூழ்ந்திருந்த லிங்கனின்உள்ளத்தே ஒளியை எழச் செய்தாள். வறுமை யால் மறக்கடிக்கப்பட்ட பள்ளி [illegible]

முறையில் லிங்கனை அவன் பதினெருவது ஆண்டு எனையோர்க்கு அறிமுகப்படுத்தியது. ஆபிரகாம் லிங்கன் முதல்வேலையாக மக்களை ஆறு கடத்தும் ஓடக்காரனாக அமர்ந்தான். வாரம் ஒன்றுக்கு ஆறு ஷில்லிங் ஊதியம் கிடைத்தது. சிறிது நாளில் அவ்வேலையை விட்டகன்று வேறு வேலைகளிலீடுபடத்தொடங்கினான். காரணம், ஓடமுதலாளியின் வீட்டிலிருந்த நூல்கள் முழுதும் படித்துவிட்டபடியால்வேறுஇடத்தில் வேலைசெய்தால் மற்றும் பல நூல்கள்படிக்கலாகும் என்ற அவா அவன் உள்ளத்தை உந்த, புத்தம் புதிய வேலைகள் பார்க்கத்தொடங்கினான். கசாப்பு வேலை, குதிரைகள் கண்காணிப்பு, தோட்டவேலை, நாட்டு மளிகை விற்பனை முதலிய பலவேலைகள் செய்தான். லிங்கன் படிப்பை விரும்பிய அளவுக்கு மக்களோடு அளவளாவும் பழகத்தையும் விரும்பினான். லிங்கனின் பேச்சிலுள்ள நகைச்சுவை, நயப்பாடு, மற்றவர்களைப்போல் பேசும் நடிப்புப் பேச்சு, கதையும் அவலிக்கூறும் ஆற்றல், கதைகள் கூறும் திறமை ஆகியவற்றைக் கேட்டுணர மக்கள் தேனை மொய்க்கும் ஈக்கள் போல அவனிடத்தில் கூடிவிடுவார்கள்.

லிங்கன் மக்களோடு அடிக்கடி அளவளாவி வந்த காரணத்தால் நாளடைவில் சொல்லாற்றலுடைய வணிக அரசியலிலே பங்கு கொள்

(7-ம் பக்கம் பார்க்க)

---

## மகாத்மாவால்

1-ம் பக்கத் தொடர்ச்சி

ஒருடைய தத்துவசாஸ்திரம், கவித்திறமை, வான்சாஸ்திரம் முதலியவைகளைப் புகழ்ந்தார். ஆஞ்சல்பாபர மக்களையும் பெண்களின் நிலைமையைப்பற்றியும் நன்றாகக்கூறவில்லை. தேக பலத்தாலும் புத்தியாலும் அவர்கள் மிகவும் வருந்தத்தக்க நிலையில் கீழாகஇருந்தார்கள், கல்விக்கப்படாதபடி சிதறுண்டார்களென்றும், எல்லாவிதங்களிலும் [illegible]





# புராண காலப் பஞ்சத்தின் புதுமை

[நக்கீரன்]

பெரும்போர் காரணமாக ஏற்பட்ட பலவிதமான நெருக்கடிகளும் இன்னல்களும் ஒன்று சேர்ந்து நம் நாட்டில் உணவுப் பஞ்சத்தை உண்டாக்கி, அதைச் சமாளிப்பதற்காக நம் நாட்டில் என்றும் இல்லாத உணவுப் பங்கீட்டு முறையும் ஏற்படும்படி செய்துவிட்டன. போர்முடிந்ததும் இந்தக்குறை தவிர்க்கப்படும் என்று பலரும் எதிர்பார்த்தனர். ஆனால் எதிர்பார்த்ததற்கு மாறாகப், போர் மேகம் கலைந்து நாட்டில் சமாதான ஒளி நிலவிவரும் — வரக்கூடிய இந்நாளில்தான் உணவுப் பஞ்சம் தன் முழு வேகத்தையும் நாட்டில் பரப்பி, இதுசம்பந்தமாக உலகம் முழுவதுமே பரபரப்போடு செயலாற்றும் நிலைமையையும் உண்டாக்கி விட்டது. எங்கும் இதே பேச்சாக இருந்துவருவதைக்காண்கிறோம்.

போர்முடிந்ததும் நம் நாட்டில், அதிலும் குறிப்பாகச் சென்னை மாகாணத்தில் முன்னையவிட இப்போது அதிக பஞ்சம் ஏற்பட்டதற்குக் காரணம், இம்மாகாணத்தில் ஏற்பட்ட புயல்கொடுமையும்—மழையின்மையுமேயாகும். போர்ப் புயலில்சிக்கிப் போதியஉணவில்லாமல் தவித்த மக்கள், 'இந்தப்பொல்லாத போர் எப்போதொழியும்? எங்கள் பசிக்குப் போதிய உணவு எப்போது கிடைக்கும்' என்று ஏங்கி எதிர்பார்த்திருக்கும் சமயத்தில், இயற்கை தனது புயலைக் கிளப்பி, மழையைக் குறைத்து, விளைவை இல்லாமல் செய்துவிட்டது. புயலை அடக்கி, மழையைப் பெய்யும்படி செய்து, வயலை விளைவுள்ளதாக்கி வேண்டியதைவேண்டியபோதே செய்பவர்கள்-செய்ய வல்லவர்களாகப் பேசப்படும் வானுலக வள்ளல்களும் (கடவுளரும்) வாளா இருந்து விட்டனர். 'ஆபத்பாந்தவர்கள்' 'அனாத ரட்சகர்கள்' என்று சொல்லப்படுபவர்கள்கூட இந்தச்சமயத்தில் தங்கள் பக்தகோடிகள் பரிதாபத்திற்குரிய பசிக்கொடுமையினால் படாதபாடு படும்படி செய்துவிட்டனர். தங்கள் பசிக்கே போதிய உணவு இல்லாத இந்த நிலைமையிலும்கூடப், பக்த கோடிகள் தங்கள் கடவுளருக்குச் செய்யவேண்டிய பூஜா காரியங்களைச் சிறிதும் குறைவின்றிச் சரிவரவே செய்து வந்தனர்—வருகின்றனர். என்றபோதிலும் 'அவர்கள்' 'இவர்கள்' பால் சிறிதும் கருணை காட்டவில்லை. கருணை காட்டாவிட்டாலும்போகிறது, காலமழைக்குக்கூடக் கதவடைப்புச் செய்துவிட்டனரே! இதற்குக் காரணம் என்ன? கடவுளுக்கேற்ற பக்தர் இல்லையா? அல்லது பக்தருக்கேற்ற கடவுள் இல்லையா? இவ்விரண்டில் எது உண்மை என்பது குறித்து நாம் இங்கு ஆராயவில்லை; அது நம்முடைய வேலையுமல்ல.

மழையை வேண்டும்போது வருவிக்கவும் வேண்டாதபோதுதவிர்க்கவும் முடியும் என்ற மனித அறிவையும், ஆராய்ச்சியையும் ஆதரித்து, அத்தகைய அறிவும் ஆராய்ச்சியும் உலகெங்கும் பரவி நாடும் மக்களும் செழிப்புற வேண்டுமென்ற துறையில் நம்பிக்கையையும் விருப்பத்தையும் நாம் மேற்கொள்பவர்களாதலால், மேற்கொள்வதுமட்டுமல்ல, முயற்சித்தால் முடியாததொன்றில்லை என்பதில் கருத்துள்ளவர்களுமாதலால், அவனருளால் அவனியைச் செழிப்பாக்கலாம் என்று கருதுபவர்கள் அந்தச் 'செம்மை'யான பணியில் ஈடுபட்டும். நாம் அதற்குக் குறுக்கே நிற்கவில்லை. ஆனால், ஒன்றைமட்டும் இங்கு குறிப்பிடாமல் இருக்கமுடியவில்லை.

பஞ்சம் இப்போதுமட்டும் ஏற்பட்ட ஒரு புதுமையன்று. இதற்கு முன்னரும் பலதடவைகள் ஏற்பட்டிருக்கிறது. நினைத்ததை நினைத்த அளவிலேயே செய்துமுடிக்கவல்ல அருள்வள்ளல்கள் இருந்த காலத்திலும் நம் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. எலும்பைப் பெண்ணாக்கிய—இறந்தவனை எழுப்பிய—ஊமையைப் பேசுவித்த-ஆண்பனையைப் பெண்பனையாக்கிய-நஞ்சை அமுதாக்கிய—நரியைப் பரியாக்கிய — முதலையுண்ட பிள்ளையை மீட்ட—ஆற்றில் ஏட்டை எதிரேறும்படி செய்த—உலர்ந்த ஏட்டை நெருப்பிலிட்டுப் பச்சையாக எடுத்த—கல்லைக் கடலில் மிதக்கும்படி செய்த—எரிகின்ற சுண்ணாம்புக் காளவயைத் தண்ணென்றிருக்கும்படி செய்த—யானை குதிரைகளை வானஊர்தி (Aeroplane) ஆக்கிய-மறைக்கதவினை அடைக்கவும் திறக்கவும் செய்த—தேய்த்த முழங்கையையும் அறுத்த கூந்தலையும் உடனே வளரும்படி செய்த—அருள் வள்ளல்கள் உயிரோடு நடமாடிய காலத்திலும் ஒரு பஞ்சம் ஏற்பட்டது. அப்படிப்பட்ட பஞ்சம்! இன்று ஏற்பட்டுள்ள பஞ்சத்திற்குக் கூறப்படும் காரணமே அன்று ஏற்பட்ட பஞ்சத்திற்கும் கூறப்பட்டிருக்கிறது.

> "மண்ணின்மிசைவான் பொய்த்து நதிகள் தப்பி மன்னுயிர்கள் கண்சாம்பி உணவுமாறி,
> ..................மிக்க பெரும்பசி உலகில் வரக்கண்டு..........."

என்பது சேக்கிழார் வாக்கு. அதாவது:— மழையில்லாத காரணத்தால் காவிரியாற்றில் தண்ணீர் இல்லாது போகவே, விளைச்சல் இன்றி, மக்கள் தாங்கமுடியாத பெரும்பசிக்கு ஆளானார்கள் என்பதாகும். இந்தப் பஞ்சம், பெரிய புராணத்தில்பேசப்படும் அப்பரும் சம்பந்தரும் ஒருங்குசேர்ந்து, ஊர் ஊராகச் சென்று அருள் மழை பெய்துவந்த காலத்தில் ஏற்பட்டதாகும். கொடியவை களைந்து நல்லவை செய்ய நாதனருளைப்பெற்ற 'நல்லடியார்கள்' நாட்டை வலம் வந்த காலத்தில் ஏற்பட்டது இப் பஞ்சம். இப்பஞ்சத்தைக் கண்ட சம்பந்தரும் அப்பரும், இதனை ஒழிக்க விரும்பினர். இந்த விருப்பம் அவர்களுக்கு ஏன் ஏற்பட்டது? பசியால் வாடிநின்ற மக்களின் இரங்கத்தக்க நிலையைக் கண்டா? இல்லை. மக்கள் அனைவரையும் வருத்திய பஞ்சம், அண்ணல் தம் அடியார்களையும் தீண்டிற்றும். அடியவர்களின் பசிநோயைப் போக்க விரும்பிய அப்பரும் சம்பந்தரும், அம்மையப்பனை நினைந்த வண்ணம் 'ஆனந்த' நித்திரை செய்தனராம். அம்பிகைபாகன், அவர்கட்குக் கனவிலே தோன்றி, "இது கால மாறுபாடு என்றாலும், பசி நோய் உங்களைச் சிறிதும் பாதியாது. உங்களைச் சூழ்ந்துள்ள அடியவர்கள்பசியால் மெலிய யாம் சகியோம். பஞ்சம் நீங்கும்வரை, ஆலயத்தின் கீழ்ப் பீடத்திலும் மேற் பீடத்திலும் ஒவ்வொரு பொற்காசு வைப்போம். அதை நீங்கள் இருவரும் ஆளுக்கொன்றாக எடுத்து, அடியவர்கட்கேற்பட்ட பசியைப்போக்குமின்" என்று கட்டளையிட்டார். அதன்படி ஆலயத்தில் பொற்காசு கிடைத்தது. அதைக்கொண்டு அரிசிவாங்கி அடியவர்களின் பசிக்கு அன்னமிடப்பட்டது. பஞ்சம் தீரும்வரை, பொற்காசுகள் ஆலய பீடத்தில் கிடைத்துவந்தன. பஞ்சம் நின்றதும் சிவனார் பொற்காசு வழங்குதலை நிறுத்திவிட்டார். இந்நிகழ்ச்சி, பெரிய புராணத்தில் திருஞான சம்பந்தர் வரலாற்றில் காணப்படுவது. இதனை ஏன் இங்கு குறிப்பிடுகின்றோமென்றால், இன்று ஏற்பட்டுள்ள பஞ்சத்திற்கும், அன்று ஏற்பட்ட பஞ்சத்திற்கும் காரணம் ஒன்றேயாயினும், அன்றைய பஞ்சத்தை மாற்ற அடியவர்கள் கையாண்ட முறையையும், இன்றுஏற்பட்டுள்ள பஞ்சத்தை மாற்ற அறிஞர்கள் கையாளும் முறையையும் புராணத்தில் புதுமைகாணும் புலவர் பெருமக்கள் ஒப்பு நோக்கிப் பார்க்க வேண்டுமென்பதற்காகவே இதனை இங்கு குறிப்பிட்டு ஆராயவேண்டியிருக்கிறது

அப்பரும் சம்பந்தரும் தங்கள் அடியவர் குழாங்களுடன் நாடுபல சுற்றித், திருவீழிமிழலை என்னும் ஊருக்கு வந்தகாலத்தில்தான், நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது. பஞ்சம், நாட்டுமக்களை வருத்தியதைப்பற்றி அவர்கள் ஒருசிறிதும் கவலைப்படவில்லை. அவர்கள் தலைவனான சிவனும் அதைப்பற்றிக் கிஞ்சிற்றும் கவலைப்பட்டாரில்லை.

> "உலகியல் புநிகழ்ச்சியினில் அணைந்த தீய உறுபசிநோய் உமை அடைய, தெனினும் உம்பால், நிலவுசிவநெறிசார்ந்தோர் தம்மை வாட்டாமேகு தற்கு நித்தமோர் காசு........
> ........யாமளித்தோம்..........."

என்று சிவனார்கூறியதாகச்சேக்கிழார் பாடியுள்ளார். அதாவது:— 'உலகியல்புக்கேற்ப நிகழ்ந்தகால மாறுபாட்டால் உண்டான இக் கொடிய பசிநோய் உங்கள் இருவரையும் (அப்பரையும் சம்பந்தரையும்) வருத்தாதென்ற போதிலும், உம்முடன் வந்துள்ள சிவனடியார்களுக்கு, ஏற்பட்டுள்ள பசிநோயைப்போக்குவதற்கு, நித்தமோர் பொற்காசு நாம்தருவோம்" என்று சிவனார் கூறியிருக்கிறாரேயன்றி, பஞ்சத்தால் பதைத்துக்கிடந்தமக்கள் அனைவருக்கும்தம்மால் கொடுக்கப்படும் பொற்காசுகளின் துணை கொண்டு பசியாற்றும்படி அருள் புரிந்தாரில்லை. "உம்பால் நிலவுசிவநெறி சார்ந்தோர்க்குமட்டுமே" என்று, வெட்டொன்று துண்டிரண்டு என்பதாக வரையறுத்துப்பிரித்தே கூறியிருக்கிறார். ஆனால் அன்று ஏற்பட்ட பஞ்சம், அப்பர்சம்பந்தர் ஆகியவர்களுடன்வந்த அடியவர் கூட்டத்தைமட்டும் பாதிக்கவில்லை.

> "மன்னுயிர்கள் கண்சாம்பி உணவுமாறி......................."

என்று சேக்கிழாரே கூறியுள்ளார். அதாவது:—உயிர்கள் அனைத்தும்பசியால்கண்பஞ்சடைந்திருந்தனவாம். என்றபோதிலும், அனைத்துயிரையும் ஒன்றெனக் கருதுவதாகச் சொல்லப்படும் கருணை வள்ளலாம் கண்ணுதலுக்குப் பசியால் கண் பஞ்சடைந்திருந்த பரிதாபத்திற்குரிய உயிர்கள்பால் இரக்கம் ஏற்படவில்லை.

இச்சொல்லப்பட்ட சிவன் ஏன் இவ்வாறு நடந்துகொண்டார்? என்றெண்ணியபோது, ஒருக்கால், 'சிவன்' போன்ற வேறு கடவுளரும் இருக்கிறார்கள் போலும்; அதனாலேதான், சிவனார் தம்மைச் சார்ந்த சிவனடியார்களுக்குமட்டும் உணவளிக்கும் வசதியைச் செய்து கொடுத்தார்; மற்றவர்களுக்கு, அவர்களின் கடவுளர் உணவளித்திருப்பார் என்றெண்ணி, அதற்கேதாவது ஆதாரம் இருக்கிறதா என்றெண்ணி, மேலும்பெரிய புராணத்தைத் தொடர்ந்து படித்தேன். இந்தஐயத்தை எனக்குஉண்டாக்கியசம்பந்தர் வரலாற்றில் 562-வது பாடலுக்கு அடுத்துள்ள 563-வது பாடலிலேயே,

> "வானாகி நிலனாகி அனலுமாகி மாருதமாய் இருசுடராய்நீருமாகி, ஊனாகி உயிராகி உணர்வுமாகி உலகங்கள் அனைத்துமாய் உலகுக்கப்பால் ஆனத வடிவாகி நின்றார்..................."

என்று சொல்லப்பட்டிருத்தலைப் பார்த்ததும், எனக்கு ஒன்றும்புரியவில்லை. எல்லா உலகுமுமாய், எல்லா உயிர்களுக்குப் தந்தையாகவன்றே சிவன் பேசப்படுகின்றார்! இப்படிப்பட்ட ஒரு 'பொதுத்தன்மை' வாய்ந்த கடவுள், தம்பிள்ளைகளில் ஒருசிலரை மட்டும்பிரித்து, அவர்களுக்குச் சிவனடியார்கள் என்ற பட்டத்தை அளித்து, அவர்களின் பசிநோயை மட்டுமே மாற்றுவதற்குப் பொற்காசு வழங்கிற்றென்று கூறப்படுகின்றதே! சிவனடியார்கள் என்ற பட்டத்திற்கு அகப்படாதஅல்லது அதற்குப்புறம்பான மக்களுடையவும் பிற உயிர்களுடையவும், பசி எவ்வாறு— யாரால் நீக்கப்பட்டதென்பதற்குப் புராணத்தில் ஒன்றும்சொல்லப்படவில்லையே! அந்தக் காலத்தில் எல்லாமக்களுமே சிவனடியார்களாய் இருந்தார்கள், ஆகவே எல்லாருடைய பசியும் சிவனால் வழங்கப்பட்ட பொற்காசின் உதவியால் நீக்கப்பட்டதென்று கொள்வதற்குமில்லையே! சிவனடியாரல்லாத வேறு மக்களும் இருந்தாகவன்றே புராணம் கூறுகின்றது! இந்த நிலையில், இச்சொல்லப்பட்ட சிவனை, எல்லாமாய்—எங்குமாயுள்ள ஒரு முழுமுதற் பெருங்கடவுள் என்று யாங்ஙனம் ஒப்புக்கொள்ள முடியுமென்று கேட்டாலோ, கேட்டவர்களை நாத்திகர் என்று நாவலோர் தங்கள் நாத்தழும் பேறும்வரை நாணமின்றிப் பேசமுன்வந்துவிடுகின்றனர்.

இனி, அடியவர்களின் ஆற்றமுடியாத கொடிய பசிநோயைக்கண்டு அதனைஎப்படியாவது நீக்கவேண்டுமென்று கருதிய அப்பரும், சம்பந்தரும், ஆண்டவனை நினைந்தவண்ணம் ஆனந்த நித்திரை செய்தனராம். அந்த ஆனந்த நித்திரைக்கு அகமகிழ்ந்த ஆண்டவன், அவர்கட்குக்கனவிலே தோன்றிப்பொற்காசு வழங்கிச்சென்றாராம். அடியவர்கட்கோ அடக்கமுடியாதபசித்துன்பம். அத்துன்பத்தை நீக்க நினைந்தவர்கட்கோ அளவு கடந்த ஆனந்த நித்திரை! அடக்கமுடியாத பசித்துன்பத்தால் அல்லற்படுபவர்களைக் கண்டு, கவலைமிகுதியால் நித்திரையின்றி நெஞ்சுகலங்கி செய்வதொன்றறியாது, "என் செயலாவதொன்றில்லைஇனித்தெய்வமே உன் செயலே என்று உணரப்பெற்றேன்" என்ற நிலையில் இருக்க வேண்டியவர்கள், அங்ஙனமன்றி ஆனந்த நித்திரைசெய்தனர் என்றும், அதற்கு அகமிகமகிழ்ந்த ஆண்டவன் அவர்களுக்குப்பொற்காசுகளை வழங்கினன்என்றும்கூறுவது எந்த முறைபற்றியதோ யாம் அறியோம். இன்றுநம்நாட்டில் ஏற்பட்டபஞ்சத்தைப் போக்குவதற்காக அமெரிக்கா முதலான வெளிநாடுகளுக்குச் சென்றுள்ள தலைவர்கள், எப்படிப்பட்ட கல்நெஞ்சம் படைத்தவர்களின்உள்ளமும், அவர்களின் உருக்கமான விண்ணப்பத்தைக்கேட்ட அளவிலேயே இளகித்தங்களாலான உதவியைச்செய்தாகவேண்டுமென்ற நிலைக்குக் கொண்டுவந்துவிடுகின்றது. ஆனால், அன்று ஏற்பட்ட பஞ்சத்தைப் போக்க எண்ணியவர்களின் விண்ணப்பம், ஆனந்தநித்திரையின்வழியாக எந்தவிதமான தொல்லையு

(6-ம் பக்கம் பார்க்க)

# திராவிட நாடு

காஞ்சி 10 - 3—46 ஞாயிறு


## விசாரணை நடத்துக

★

"ஐயோ, மகனே! மாண்டனையா?" என்று தாய் அலறுகிறாள் தன் மகன், குண்டடிபட்டு இறந்த செய்திகேட்டு. குண்டு, மகனுடைய உயிரைக் குடித்த இடம், யுத்தகளம் என்றாலாவது, தாய் ஓரளவு, துக்கத்தைப் பொறுத்துக் கொள்ளமுடியும். மகன், ஊர் நடுவே, பிணமாகிக் கிடக்கிறான் என்றால், அனலிடு மெழுகென அம்மையின் மனம் ஆகாதிருக்குமோ! ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலே, மகனைப்பறி கொடுத்த தாய்மார்கள் அழுதனர், அங்கு கடும்போர் நடந்தபோது. இந்திய பூபாகத்திலே, போர் இல்லை, ஆனால் இந்த கடந்த பதினைந்து நாட்களிலே, கல்கத்தா, பம்பாய், சென்னை முதலிய பெரியபட்டணங்களிலே மட்டுமல்ல, அமைதி நிலவும், காஞ்சிபுரம், செய்யாறு போன்ற நகரங்களிலேயுங்கூடத், தாய்மார், கோவெனக் கதறும்நிலை வந்தது—பிணங்கள் பாதையிலே கிடந்தன. கடுமையான கலகம்—அதிகாரிகள் தாக்கப்பட்டனர்—கடைகள் சூறையாடப்பட்டன—கட்டடங்கள் கொளுத்தப்பட்டன—எனவே துப்பாக்கிப் பிரயோகம் செய்யவேண்டிநேரிட்டது—என்று துரைத்தனத்தார்கூறுவர். இதனால், சாந்தியோ, சமாதானமோ, ஏற்பட்டுவிடமுடியுமா? துப்பாக்கிப் பிரயோகம் நடத்தப் படவேண்டிய அளவு கலகமும் கலவரமும், ஏன் நடந்தன? என்பதுபற்றியல்லவா, விளக்கம் வேண்டும். கலகம் நேரிட்டால், கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும், என்ற "சுபர்தார்" கூறிவிட்டால், போதுமா? ஏன், கலக உணர்ச்சி வளருகிறது, எப்படி அதனைக்களைவது, என்பதுபற்றிய காரணங்களையல்லவா, துரைத்தனத்தார் ஆராயவேண்டும். சுதந்திர நாட்டிலேயும் இதுபோன்ற நிகழ்ச்சிகள் உண்டு, ஆனால், அந்த நாடுகளில், அவை, வெறும் 'அமளி' என்ற பெயரில் பொறிக்கப்படும். இங்கு நடப்பது அன்னிய ஆட்சி. அன்னிய ஆட்சியிலே, இதுபோன்ற நிகழ்ச்சிகள் இருக்குமானால், பன்மடங்கு அதிகமாகத்தான் மக்களின் மனவேதனை இருக்கும். அன்னிய ஆட்சியிலே, ஆனந்த வாழ்வு ஆறென ஓடினாலும், உணர்ச்சியுள்ள மக்கள் அன்னிய ஆட்சியை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். அதிலும், தடியடியும் துப்பாக்கிப் பிரயோகமும், நடத்தி, அமைதியை நிலைநாட்டும், முறையிலே, அன்னிய ஆட்சி இருக்குமானால், மக்கள், எவ்வளவு அதிகமாக மனம் புண்ணுவர், என்பதை விவரிக்கத் தேவையில்லை.

சர்க்கார், இந்தியாவை, வெறும் 'எடுபிடி' என்றும், 'முன்னேடும் பிள்ளை' என்றும், இன்றும் எண்ணினால், ஏமாற்றமே அதிகரிக்கும். அதிருப்திஎன்ற அலைமோதும் மனதுடன், கோடிக்கணக்கான மக்கள், வாழும், இடம் இந்தியா. எந்த விநாடியில் வேண்டுமானாலும், யார் வேண்டுமானாலும், எதற்குவேண்டுமானாலும், இங்கு இதுபோது, 'அமளி'யை மூட்டிவிடமுடியும், அவ்வளவு 'டென்ஷ்' உணர்ச்சியுடன் நாடு இருக்கிறது. குனிந்து நடக்கும் மக்கள் இல்லை; நிமிர்ந்து நடக்கவும், ஏன்? என்று கேட்கவும், இது தவறு! என்று கண்டிக்கவும், மக்கள் பயிற்சி பெற்றுவிட்டனர். உலகெங்கும் காணப்படும் சுதந்திர ஆர்வம், இங்கு கொழுந்துவிட்டு எரிகிறது. சிறப்பாக, வாலிபர் உள்ளம், கோபக்கனலைக்கக்கும், உலைக்கூடமாகிவிட்டது. இந்திய பூபாகம் இன்று ஓர் எரிமலை! இதனை உணரமறுக்கும்வகையில், அடக்குமுறைகளைக்கொண்டோ, அவசரச் சட்டங்களைக்கொண்டோ, எப்படியோ ஆளலாம், என்ற அந்த நாளைய எண்ணத்திலே, இலயித்துச் சர்க்கார், ஏமாற்றத்தைத்தான் காண்பர். அடிக்கடி நடைபெறும் அமளிக்குக்காரணம், அதிருப்தி. அதிருப்தி உண்டாகாது தடுக்கவோ, அதிருப்தி வளருவதை உணரவோ, அதனைக் களையவோ, முயற்சிசெய்யாது, மூண்டுவிட்ட பிறகு, மூலைக்கு மூலை கலகமும் கலவரமும் நேரிட்டபிறகு, சர்க்கார், சட்டத்தையும் சமாதானத்தையும் நிலவச் செய்கிறோம் என்ற சிந்து பாடுவதும், அதற்குத்துப்பாக்கி வேட்டுச் சத்தத்தைத் தாளமாக்க் கொள்வதும், பயனும்தராது, யாரும்பாராட்டவும் மாட்டார்கள். இதனால், கலகங்களை அடக்கிவிடலாம், ஆனால் கசப்பு அதிகரிக்குமே யொழிய, குறையாது. மனக்கசப்பின் காரணமாகவே, கலகங்கள் மூள்கின்றன; கசப்பைப் போக்குவதற்கு மார்க்கம்தேடாமல், தடியடி துப்பாக்கிப் பிரயோகம் போன்ற, முறைகளால் கலகங்களை அடக்குவதன் மூலம், ஏற்கனவே உள்ள கசப்பு அதிகரிக்கும்காரியத்தையே, துரைத்தனத்தார் செய்கின்றனர். துரைத்தனர், என்பது துரைமார் சர்க்கார், எனவே, இந்தக் கசப்பு, மேலும் பன்மடங்கு அதிகரித்துவிட்டது. முறை மாறவேண்டும்; நிலைமை மாறிவிட்டதைச் சர்க்கார் உணரவேண்டும்.

கடல் குமுறிற்று, முதலில்! கடற்படையினர் வேலை நிறுத்தம் செய்தனர். வேலை முறை, சம்பளம், இவைகளிலே அதிருப்தி கொண்டு மட்டுமல்ல, மேலதிகாரிகளாக உள்ள வெள்ளையர், தங்களை நடத்தும் முறையைக்கண்டு, அவர்கள் கொதித்தெழுந்து, கிளர்ச்சிசெய்தனர். நிறத்திமிர்கொண்ட அதிகாரிகள், கடற்படையிலே பணிபுரியும் நமது மக்களை, நாய்க்குப் பிறந்தவனே! கூலிக்காரனே! என்றெல்லாம், இந்த நாகரிக நாட்களிலேயும், கேவலமாகப் பேசினால், கடலிலே, ஏன் குமுறல் இராது! இந்த நிறத்திமிரைக்களைய வேண்டும், அந்த அதிகாரிகளுக்குச் சர்க்கார், சரியானபடி புத்திபுகட்டி, "ஆணவமாக நடந்து கொள்ளாதீர்கள். நாடு நம்முடையது அல்ல. இந்திய பூபாகத்தை நாம் ஆள்வதே, சர்வதேச நாகரிகக் கோட்பாட்டுக்கு முரண். இன்று நாம் தர்மகர்த்தா, அல்லது மைனருக்குக் கார்டியன், என்ற முறையிலே இங்கு இருக்கிறோம், வெற்றிவீரர் என்ற முறையிலே அல்ல. இந்தியர்களைக் கேவலப்படுத்த, நாம் ஒன்றும், அவர்களைவிட, அறிவிலேயோ ஆற்றலிலேயோ, நாகரிகத்திலேயோ, மிக்கவர்கள் என்றுக்கூறிவிடமுடியாது. வர்ணாஸ்ரம முறையின் பயனாக, அந்தப் பூபாகத்து மக்கள் சண்டாளன், நீசன், பாபாத்மா, சூத்ரன், என்று குலத்திமிர் கொண்டவர்களால்கூறப்பட்டுச், சகித்துச்சகித்துப்பழகிப் போனதால், கூலி, அடிமை, என்று நாம் கூறிவந்ததைச் சிலகாலம் பொறுத்துக் கொண்டனர். 'இது உரிமைக்குப் போரிடும்காலம். இன்று அத்தகைய ஆணவப்பேச்சை, அவர்கள் கேட்டுக்கொண்டிருக்க மாட்டார்கள். இந்திய பூபாகத்திலே இனங்களுக்குள் ஏற்பட்ட பிணக்கு நம்மை இங்கு அதிகாரிகள் என்ற நிலைக்குக்கொண்டு வந்தது என்பதை மறந்து, வீராதிவீரர்கள்நாம், அவர்கள் கேவலம் கோழைகள் என்று தவறாக எண்ணிக்கொண்டு, ஆணவமாக நடந்து கொள்ள வேண்டாம்!! நிறத்திமிர் வேண்டாம்!" என்று விளக்கம் கூறி, வெள்ளை அதிகாரிகளின் மனதைக்கழுவி இருக்கவேண்டும். நிறத்திமிர்ஒழிந்தாகவேண்டும், என்று கூறவேண்டியிருக்க, இந்திய கடற்படையே அழிக்கப்படுவதானாலும் சரி, நான் அதற்குத் தயங்கப் போவதில்லை, இந்தக்கடற்படைக்கலகத்தை அடக்கியேதீருவேன், என்று உயர்ந்த நிலையிலே உள்ள சர்க்கார்அதிகாரி கூறுவது? கடற்படைக் கலகம் அடக்கப்பட்டுவிட்டது. எதிர்பார்த்ததுதான், ஆனால், அதற்காக, எடுக்கப்பட்ட நடவடிக்கையை நாடு முழுதும் கண்டித்தது, உலகிலே பல்வேறு இடங்களிலே, இதுபற்றிப்பேசப்பட்டது. எந்தவாயால், முதலமைச்சர் அட்லி, இந்திய சுயாட்சிக்கான திட்டம் தயாரிக்க மூன்றுமந்திரிகள் இந்தியா புறப்படப்போகின்றனர், என்று கூறினாரோ, அதேவாயால், பம்பாய் கடற்படையினரிடையே ஏற்பட்ட வேலை நிறுத்தக் கலகத்தை அடக்க, பிரமாண்டமான கடற்படை, இந்தியாவை நோக்கிச்சென்று கொண்டிருக்கிறது, என்று கூறவேண்டி இருந்ததே! பெருமைக்குரிய பேச்சா அது? கலகத்தை அடக்கக் கப்பல்! பிறகு, வேறோர் கப்பலிலே, காகிதத்திட்டங்கள்!! நாட்டிலே மூண்டுவரும்விடுதலை உணர்ச்சியை அறியாத சர்க்காரின் முறை சரியல்ல!

கடற்படையில் குமுறல் ஏற்பட்டதும், குறைகளைக் களைந்துவிட்டு, நாட்டுமக்களுக்கும் அதைத் தெரிவித்துவிட்டு, நாட்டிலேஉள்ள கட்சித்தலைவர்கள் அனைவரையும் அழைத்து, விஷயத்தை விளக்கிவைத்து, அவர்களைக்கொண்டு, மக்களின்மனதிலே, சாந்தியும்சமாதானமும் உண்டாகும்படிச்செய்திருக்க வேண்டும். அறிக்கைகள்விடுவதன் மூலம், மக்களைச் சமாதானப்படுத்தலாம், என்று பிரிட்டிஷ்சர்க்கார், பிரிட்டனைப் பொறுத்தவரையில் எண்ணலாம், இந்தியாவைப்பொறுத்தவரையில் எப்படி அப்படி எண்ணலாம்? அன்னிய ஆட்சியின் அறிக்கைகளைச், சுதந்திர ஆர்வத்திலே எதையும் தியாகம் செய்யும்துணிவு பெற்றுள்ள மக்கள், எப்படி ஏற்றுக்கொண்டு திருப்தி அடைவார்கள்? நாட்டுமக்களின்தலைவர்களைக் கொண்டுதான், இந்தத் 'திருப்தி' உண்டாகச்செய்ய முடியுமேதவிர, சர்க்கார் அன்னிய சர்க்காராக இருக்கும் வரையிலே, தானாக அதனைச் செய்துவிட முடியும் என்று எண்ணுவது வெறும் பைத்யக்காரத்தனம். பம்பாய்சம்பவத்துக்குப் பிறகு, நாட்டிலே உள்ள கட்சித்தலைவர்களைக்கொண்டு, பொதுமக்கள்மனதிலே, திருப்தி ஏற்படச் செய்திருக்கவேண்டும். சர்க்கார் இதனைச்செய்யாமல், எச்சரிக்கைகள், அறிக்கைகள், முதலியபழைய சம்பிரதாயத்தாலேயே, பிரச்னையைத்தீர்த்துவிடலாம், என்றுஎண்ணிற்று. அதன் விளைவு என்ன? நாடெங்கும், பம்பாய் சம்பவம்பற்றியக்கண்டனம் கிளம்பிற்று. கண்டனத்துக்கு ஆரம்ப காரணம் அது, ஆனால், வேறு பலப்பல காரணங்கள், இயற்கையாகவே அதனுடன் இணைந்துகொண்டன, பற்பல அதிருப்திச்சக்திகளும் ஏக காலத்திலே ஒன்றோடொன்று பிணைந்து கொண்டால், கலவரத்தின் அளவும், தன்மையும், போக்கும் விபரீதமாகிறது. காஞ்சிபுரத்தில்நடைபெற்ற சம்பவம் இந்தக்கதம்ப உணர்ச்சிக்கு ஓர் எடுத்துக்காட்டு.

மாணவர்கள், ஹர்த்தால் செய்யக்கிளம்பினர். காரணம் என்ன? பல இடங்களிலே நடந்த செய்திகளைப் படித்தனர். பம்பாய் சம்பவம், ரஷீத் அலி, பர்ஹானுதீன் ஆகியோர் தண்டிக்கப்பட்டது, போன்ற சம்பவங்கள், அவைகளைக் கண்டிக்க, ஆங்காங்கு நடைபெற்ற வேலை நிறுத்தம், கடை அடைப்பு, ஊர்வலம், ஆகியசெய்திகளைப் படித்தனர், எனவே, அவர்கள், தாங்களும், ஹர்த்தால்நடத்த வேண்டுமென்று விரும்பினர்.

பம்பாய் சம்பவத்துக்குப்பிறகு, நாட்டிலே உள்ள எல்லாக்கட்சித் தலைவர்களையும் கொண்ட ஒருகூட்டு அறிக்கைமூலம், மக்கள், மனதிலே இதுபற்றி அதிருப்தி எழாதபடியான இதஉரை கூறச்செய்திருந்தால், சாதாரணமானநாட்களிலே, சாந்தத்தோடு நடந்துகொள்ளும் அம்மாணவர்கள், அன்று ஹர்த்தால் நடத்த விரும்பியிருக்க மாட்டார்கள். 'ஹர்த்தால்' நடத்தவிரும்பியபோது, பள்ளிக்கூட நிர்வாகிகள், தமது அதிகாரத்தை நிலைநிறுத்த முனைகின்றனர், மாணவர்கள், தங்கள் ஆர்வத்தையும் உரிமையையும் நிலைநாட்ட முனைகின்றனர், இரு சக்திகளும் மோதுவதால், ஹர்த்தால், கலவரம் என்ற உருவத்தை அடைகிறது. அந்தநேரத்திலேயும், பல்வேறு கட்சித் தலைவர்களைக்கொண்ட ஓர்கூட்டுக்கமிட்டி இருந்திருந்தால், கலகம் வளராது—துவக்கத்திலேயே, தொல்லை வராதபடி பார்த்துக்கொள்ளலாம். "மாட்சிமை பொருந்திய மன்னர் சர்க்கார்" மற்றவர்களைக்கொண்டு, இந்தக்காரியத்தை நடத்துவதா என்ற மனோபாவத்திலே நடப்பதால், கலகத்தை அடக்க, அதிகாரிகளை அழைத்தது. கலகம்வளர்ந்தது.

பம்பாய் சம்பவம், பர்ஹானுதீன் தண்டனை என்ற அதிருப்தியை மாணவர்கள் ஆரம்ப நேரத்தில் பேசினர். அந்தப்பேச்சுடன், வேறு பல, "அதிருப்திகள்" தாமாக இணைந்துகொண்டன.

"ஆமாம் சார்! நூல் சரியாகக் கிடைப்பதே இல்லை! இதற்கு ஒரு கன்ட்ரோலாம்! நல்லகன்ட்ரோல், நமது உயிரைவாங்கும் கன்ட்ரோல்" என்று ஒருவர் கூறுகிறார், உடனே கூட்டத்தில் ஒரு பகுதி,

கன்ட்ரோல் ஒழிக! கன்ட்ரோல் ஆபீஸ் ஒழிக என்று கூச்சலிடத் தொடங்குகிறது.

"என்ன, கூட்டம்? ஏன் இந்தக் கூச்சல்?" என்று கேட்கிறார் இன்னொருவர்!

"பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள், ஹர்த்தால் செய்கின்றனர்" என்று ஒருவர் பதில் கூறுகிறார். அதற்குள், கன்ட்ரோல் ஒழிக என்றசத்தம் கேட்கிறது. "அது என்ன?" என்று கேட்கிறார் அந்தத்தோழர், "இந்தநூல் கன்ட்ரோல் இருக்கிறதே, அதுதவறு என்று கிளர்ச்சி நடக்கிறது" என்றுபதில் கூறுகிறார்; உடனே அத கேட்டதோழர், "ஆமாம்சார்! பெரிய தொந்தரவாகி விட்டது. இந்த ரேஷன் எப்போது சார், ஒழியும்?" என்று கேட்கிறார். "நம்மை எல்லாம் அரைப்பட்டினியாக்கி, நமது உடலைப்பாழாக்கி, பிறகுதான்போகும்" என்கிறார் இன்னொருவர், "நாற்றம் குடலைப்புரட்டுகிறது. இந்தரேஷன் அரிசியை எங்கே இருந்துதான் கொண்டுவந்தார்களோ தெரியவில்லை" என்று கூறுகிறார் இன்னொருவர்; உடனே, "ரேஷன் ஒழிக! புழுத்துப்போன அரிசிஒழிக! ஒரு வகுப்புக்கு ஒருவிதமாகவும் மற்ற வகுப்புக்கு மற்றவிதமாகவும் ரேஷன் தரும் முறைஒழிக!" என்று கூட்டம் கூச்சலிடுகிறது. கூட்டத்தில் ஒருபகுதி, ரேஷன் ஆபீசுக்கேபோகஆரம்பிக்கிறது ஆரம்ப நோக்கம் அது அல்ல! ஆனால் ஒரு விதமான அதிருப்தி தெரிவிக்கப்பட்டதும், மற்ற அதிருப்திகள், மனதிலேகுமுறிக்கொண்டிருக்கும்மற்றக் குறைகள், கொந்தளித்து, ஒன்றை ஒன்று காந்தசக்திபோல் இழுத்துக் கொண்டு, பிரம்மாண்டமான உருவை அடைந்து விடுகிறது. இத்தனை விதமான அதிருப்திகளும், அவ்வப்போது நீக்கப்படாததால், ஒருசமயத்தில் அவையாவும் ஒன்று கூடும்போது, கலகம் உச்சநிலை அடைகிறது; சாதாரண சமயத்திலே செய்யக் கூடாது என்று எண்ணும்எந்தக்காரியத்தையும், அந்த நேரத்தில் மக்கள்செய்கின்றனர். அச்சம், தயை, தாட்சண்யம், காரணம், கேள்வி, நிதானம் எதுவும் அப்போது அவர்களிடம் தலைகாட்ட முடிவதில்லை. அவர்கள், அதுவரை மறைந்திருந்த ஒரு சக்தியினால் நடத்தப்படுகிறார்கள்; ஆவேச உணர்ச்சியிலே இருக்கிறார்கள். கலவரங்களின் தன்மை இதுதான்.



சர்க்கார், கலவரங்களை அடக்கக் கடமைப்பட்டவர்கள் என்று மட்டுமே கருதினால், போதாது. கலவரங்கள் கிளம்பாதபடி, ஆரம்பத்திலேயே அதிருப்திகள் தோன்றாதபடி செய்யவேண்டும். அதனைச் செய்ய அன்னிய சர்க்காரால் முடியாது. ஆகவே, நாட்டிலே உள்ள பல்வேறு கட்சித்தலைவர்களைக்கொண்டே, அந்தக் காரியத்தைச் செய்யவேண்டும். "ஆள்வது நாம், மக்களை இப்படி நடக்க வேண்டும், இவ்விதம் நடக்கக் கூடாது என்று வழி காட்டுபவர்கள், கட்சித்தலைவர்களா?" என்று சர்க்கார்எண்ணினால், பலன் இல்லை. இன்று நடக்கும் சர்க்கார், நாட்டுமக்களின் எதிர்ப்புக்கு இடையே உள்ள அன்னியசர்க்கார், ஆகவே, அது, தான் இருப்பதற்கே முதலில் சமாதானம் சொல்லியாக வேண்டும்!

சர்க்கார், கலகங்களை அடக்கினர், மக்களும், கலவரமும் பீதியும்ஒழிந்ததுஎன்று திருப்தி அடைவர், சர்க்கார் அதிகாரிகளும், கலவரத்தை அடக்கிவிட்டோம்என்றுபெருமை அடைவர், ஆனால், பிணங்கள் கொளுத்தப்பட்டன, புண்ணுக்கு மருந்து பூசப்பட்டது, தழும்புகள் உள்ளன, அடக்கப்பட்ட அமளியின் விளைவுகளாக! சர்க்கார், மக்கள்மனதிலே, இதனால் இயல்பாக ஏற்படக்கூடிய வேதனையின் தன்மையை உணரவேண்டும். சாதாரண நகரம் காஞ்சிபுரம், இதிலே துப்பாக்கிப்பிரயோகத்தால் நாலுபேர் இறந்தனர். ரயில்போகாத இடம் செய்யாறு இங்கு ஒருவர் இறந்தார் அதிகாரிகளைக்கண்டால், பணிவாகவும் பயத்துடனும் நடந்துகொள்ளும் இடங்கள் இவை; இங்கேஅதிகாரிகள் அல்லலுக்கு ஆளாயினர். இந்த அமளியின்போது, அஹிம்சை நசித்ததுபற்றிக் காந்தியார் கவலையுடன்பேசியுள்ளார். கலவரத்தின் போது நடைபெற்ற, கல்லெறி, தீ மூட்டுதல், கடைகளைச் சூறையாடுதல் போன்ற காரியங்கள், நமக்கு நாமே நஷ்டத்தையும் கஷ்டத்தையும் ஏற்படுத்திக்கொண்டதுதான் என்பதை, கலவரத்தில் ஈடுபட்டவர்களேகூட, உணர்கிறார்கள். ஆனால், கலகம், கலவரம், கல்லெறி, தாக்குதல், என்பவைகளையே திரும்பத் திரும்பக்கூறிக்கொண்டு, சர்க்கார், தனதுகடமையைத்திறம்படச்செய்துவிட்டதாகத் திருப்தி அடைவதுகூடாது. பல்வேறுஇடங்களிலே நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகங்களைப்பற்றி, விசாரணை நடத்தவேண்டும்; பொதுமக்களுக்குஇதனால் ஏற்பட்டுள்ள மனப்புண் ஆற்றப்படவேண்டும். கலகம் செய்தனர்—சுட்டோம் — சுருண்டனர், என்று பிரச்னையைச் சர்க்கார் சுருக்கமாக்குகின்றனர். துப்பாக்கிப்பிரயோகத்துக்கு அவசியம் இருந்ததா? நிலைமை வளரவிடப்பட்டதா? தானாக வளர்ந்ததா? ஆரம்பத்திலே அதிகாரிகள், கலகஉணர்ச்சியைத்தடுக்கவும், குறைக்கவும் தக்கமுயற்சி எடுத்துக்கொண்டனரா? பொதுமக்களின் தலைவர்களைச் சர்க்கார் அழைத்தனரா? என்பன போன்றவைகள் விசாரிக்கப்பட்டு, விளக்கப்படவேண்டும். மக்கள் மனதிலே, சமாதானம் நிலவ அதுவே மார்க்கம்.

பெயர்—தயாளன்
வயது—14.
நிலைமை—குண்டு மார்பிலே பாய்ந்து, இறந்தான்,

என்று பிரேத விசாரணையை மட்டும் நடத்துவதால், ஐயோ மகனே! என்று அலறிய தாய், ஆறுதல் அடைய முடியாது. குண்டுபட்டு இறந்தவர்களின்குடும்பத்தாருக்கு, மட்டுமல்ல, நாட்டுமக்கள் அனைவருக்குமே, வேதனை நீங்க வேண்டுமானால், கலகங்கள் கிளம்பாது; அதிருப்திகள் வளராது என்று உறுதிகூறவேண்டும், சர்க்கார், நாட்டிலேஉள்ள பல்வேறு கட்சித்தலைவர்களின் ஒத்துழைப்பைப் பெற்று. அது எப்படிச் சாத்தியமாகும், கலகம்நடக்கத்தான்செய்யும், அதுபோது துப்பாக்கிப் பிரயோகம் நடந்துதான்தீரும், என்று பழயபல்லவி பாடினால், நாகரிக சர்க்காரிலே நடுரோடிலே பிணம் விழுமா? என்று மக்கள் கேட்கத்தான் செய்வார்கள். "நான் என்ன செய்வது? நிலைமை அப்படி இருக்கிறதே!" என்று வெள்ளைக்காரர் கூறுவதானால், வெள்ளையனே! வெளியே போ! என்று கூறுவது தவிர, நாட்டுமக்களுக்கு வேறோர் முழக்கமும் கிடையாது.

—●—

## ★ சிந்தித்துப் பாருங்கள் ★

—(எஸ். வேதரத்னம்)—

திராவிட நாட்டு அரசியல் நிலைமையை இக்கட்டுரையில் ஆராய எண்ணுகிறேன். உள்நாட்டு நிலைமையைச் சிந்திக்குங்கால் சர்வதேச நிலைமையின் போக்கையும், நுணுக்கங்களையும் தெரிந்துகொள்ளுதல் அவசியம். ஹிட்லர் போலந்தின்மீது படை எடுத்தால், இங்கு பல்லாவரத்தில் ஆள்சேர்க்கவேண்டிருக்கிறது; வங்காளத்தில்பஞ்சம் உண்டாகிறது; அரசாங்க மந்திரிகள் சிறைக்குச் செல்கிறார்கள்; அங்காடிக் கடைக்காரன் லக்ஷாதிபதி ஆகிறான். சுருங்கச் சொன்னால், 'உலகம் மிகச்சுருங்கிவிட்டது' என்ற உண்மையை மறுக்க முடியாது. ஆகவே, திராவிடகழகத்தின் கொள்கையும், திட்டமும், அவ்வப்போது உலக அரசியல் நிலைமையால் பாதிக்கப்பட்டுத்தான் தீரும். நிலைமையை அலசிப்பார்த்து கட்சியின் அமைப்பை நிர்ணயிக்க வேண்டியது பெரியார் போன்ற தலைவர்களின்கடமை. இக்கட்டுரையில் நான் எழுதுவது கட்சியின் திட்டத்தை நிர்ணயிப்பதற்காக அல்ல; வாசகர்களின் சிந்தனையைத் தூண்டுவதற்காக.

உலக நிலைமையையும், நாட்டு நிலைமையையும் சேர்த்துக் கவனிப்போம். கடந்த ஆறு ஆண்டுகளாக நடந்த கொடிய போராட்டத்திற்குப்பிறகு, அமெரிக்கா தவிர மற்ற எல்லா நாடுகளும், வெற்றி பெற்றவைகளும், தோல்வி அடைந்தவைகளும், சோர்ந்து கிடக்கின்றன. இந்த ஆறு வருடப் போராட்டத்தில் லக்ஷக்கணக்கான மாந்தர் மடிந்து மண்ணோடு மண்ணாயினர்; இன்னும் கணக்கற்ற மக்கள் கையொடிந்து, காலொடிந்து, உற்றார் உறவினரை இழந்து, வீடு இருந்த இடம் தேடி வெறுந்திடலை அடைந்து, நடைப்பிணமாக இருக்கின்றனர். ஆனால், இத்துடன் மக்களின் துயரம் மறைந்துவிட்டதாகக்கருத முடியுமா? இல்லை. அன்று ஜப்பானில் முதலில் விழுந்த அணுகுண்டு உலகசரித்திரத்தின்வருங்காலத்தை ஒரு விநாடியில் மாற்றியது.

இந்த அணுகுண்டின் அர்த்தத்தை நம் நாட்டவர் இன்னும் நன்கு உணரவில்லை என்று நான் எண்ணுகிறேன். நான் அமெரிக்காவில் இருந்தபொழுது சிலமுக்கிய அரசியல்வாதிகள் என்னிடம், ஜப்பானை அடியோடு அழித்து விடப் போவதாகவும், அவர்கள் போடுகிறகுண்டினால் ஜப்பான் பூமிக்குக் கீழே போய்விடுமென்றும், இன்னும் பலவிதமாகவும் கூறினார்கள். ஏதோ ஏராளமான ஆகாய விமானங்களைக்கொண்டு ஜப்பானியநகரங்கள்மீது கொடுமையானகுண்டுகளை வீசப்போகிறார்கள் என்று நினைத்தேன். அணுகுண்டு விழுந்த பிறகுதான் அவர்கள் சொன்னதின் அர்த்தம் விளங்கிற்று. இக்குண்டைவீசி மறுபடியும் சண்டையிட்டால் உலகம் அழியும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், இந்த அணுசக்தியை மக்களின நன்மைக்காக உபயோகித்தால், "சுவர்க்கலோகம் என்று ஒன்றிருக்கிறது" என்று கூறுபவர்களிடம், "இந்த உலகம்தான் சுவர்க்கலோகம்" என்று தைரியமாகக் கூறலாம். உலக சரித்திரத்தில்புதிய சகாப்தம் ஆரம்பமாயிருக்கிறது. இன்னும் பத்து ஆண்டுகளில், இருபது ஆண்டுகளில் நாடுகளும், நகரங்களும் எப்படிப்பட்ட மாறுதல் அடையும் என்றுசொல்ல முடியாது. அணுசக்தி மக்களின் நன்மைக்காகவே உபயோகப்படப் போகிறது என்றுவைத்துக்கொண்டாலும், இந்த நன்மை வெள்ளையர்களுக்கு மட்டுந்தானா, அல்லது கறுப்பு மக்களாகிய நமக்கும் பங்குண்டா, என்றகேள்வி எழுகிறது. இக்கேள்விக்குப் பதில் சொல்லுமுன் இன்னும் சில விஷயங்களை ஆராய்தல் அவசியம்.

சண்டைக்குப்பிறகு, தற்சமயம் தேசங்களின் சக்தி என்ன? நான் மேற்கூறியபடி, அமெரிக்கா மட்டுந்தான் நிமிர்ந்து நிற்கிறது. நாடெங்கும் தொழிற்சாலைகள், ஏராளமான செல்வம், உணவுப் பதார்த்தங்களுக்குக் குறைவில்லை, விஞ்ஞான ஆராய்ச்சியின் பலனாக ஏற்பட்ட சுகவாழ்வு. அமெரிக்காவிற்கு அடுத்தபடியாக ரஷ்யா. இங்கும் மக்களின் நிலைமை துரிதமாக முன்னேறுகிறது. சண்டை ஏற்படாமலிருந்திருந்தால்ரஷ்யர் அமெரிக்கரை விடமுன்னேறி இருப்பார்கள். ஏற்பட்ட சேதத்தைச் சரிப்படுத்துவதிலும், புதிதாக உற்பத்தி செய்வதிலும் இப்பொழுது ஈடுபட்டிருக்கிறார்கள். பிரிட்டனின் நிலைமை கடன்பட்ட தஞ்சாவூர் மிராசுதார் நிலைமைபோல் இருக்கிறது. பெரிய குடும்பம். ஆனால் ஏராளமானகடன் ஏற்பட்டுவிட்டது. யாரையாவது கடன் கேட்டால் கிடைக்கிறதில்லை. ஆனால் பழைய டம்பத்தையும் ஆதிக்கத்தையும் விட்டுவிட மனமில்லை.

பிரிட்டனின் கதியும் இதுதான். பணமில்லை, உணவில்லை, கறுப்பு மக்களைச் சுரண்டி இலாபம் அடிக்கலாமென்று நினைத்தாலோ காலம் மாறிவிட்டது. தூங்கினவர்கள் விழித்துக் கொண்டார்கள். கிட்டத்தட்ட இந்த நிலையில்தான் மற்ற ஐரோப்பிய ஏகாதிபத்யங்களும். கறுப்பர்களை எவ்வளவு தூரம் அடக்கியாள முடியுமோ அவ்வளவும் பார்க்கிறார்கள். ஆனால் எதிர்பார்த்தஅளவிற்குப்பலனில்லை. ஐரோப்பாவின் சிறிய நாடுகளின் நிலைமையும் மிகப்பரிதாபகரமானது. ஐரோப்பிய அரங்கத்திலே இந்நாடுகள் கையொடிந்த காலொடிந்த மரப்பொம்மைகள் மாதிரிச்சிதறிக் கிடக்கின்றன.

கீழ் நாடுகளை எடுத்துக்கொண்டால், துருக்கி, எகிப்து, பலஸ்தீனம், பாரசீகம் ஆகியவைகளும், இன்னும் இதர கீழ் நாடுகளும், வெள்ளை ஏகாதிபத்தியங்களின், முக்கியமாக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின், சூழ்ச்சிகளைத் தடுப்பதிலேயே தங்கள் சக்தியைச் செலவிட வேண்டியிருக்கிறது.

நான் இதுவரை சொல்லியதிலிருந்துதோன்றுவதுஎன்ன? அணுசக்தியினால் உலக சரித்திரம் திடீரென மாறும். இதுவரை கறுப்பு மக்களைச்சுரண்டித்தின்று கொழுத்திருந்த வெள்ளை ஏகாதிபத்தியங்கள், முக்கியமாக பிரிட்டிஷ்ஏகாதிபத்தியம், ஆட்டமடைந்து விட்டது. ஆனால் ஆசிய மக்களை இன்னமும் அடக்கியாளப் பல தந்திரங்களைக் கையாள முயற்சிக்கின்றன.

இந்நிலைமையில் திராவிட மக்களின் கடமை என்ன? நம் நாடு விடுதலை அடைந்தால் நாம் உலகிற்கே தலைமை வகிக்கலாம். நீர்வளம், நிலவளம் மிகுந்த இந்நாட்டில் தொழிற்சாலைகளையும் ஏராளமாக ஏற்படுத்தி, நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைத்தும் சரியான ஊதியம்பெறுதஏழைமக்களைப்பணக்காரர்கள் ஆதிக்கத்தினின்று விடுவித்து, மூடநம்பிக்கைகளை ஒழித்து, இன்னும் பல ஆக்க வேலைகளையும் செய்தால், நாம் ஆனந்தமான வாழ்க்கை நடத்தலாம். ஆனால், இவைகளெல்லாம் நாடு விடுதலை அடைந்தால்தான் முடியும். காங்கிரஸ் ஸ்தாபனம் நாட்டு விடுதலைக்காகப் பாடுபட்டிருக்கிறதென்று சொல்லப்படுகிறது. ஆனால், இதே காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பெயரால், தேசீயத்தின்பெயரால், காங்கிரசை ஆட்டிவைக்கும் சிலர் திராவிட மக்களை என்றென்றும் அடிமைப்படுத்த முயல்கிறார்கள் என்பதையும் யாரும் மறுக்கமுடியாது.

சமீபத்தில் இதற்கு நல்ல உதாரணம் கிடைத்தது. திரு. காமராஜ் அவர்களை நான் நன்கு அறிவேன். மிகவும் நேர்மையான மனிதர் நிடசித்தமுள்ளவர். கஷ்டத்தைப் பொருட்படுத்தாத தீரமும், உண்மையான தேசபக்தியும் உள்ளவர். காங்கிரஸ் ஸ்தாபனத்தின் மூலமாகத்தான் நாடு விடுதலை அடைய முடியும் என்று நம்புகிறவர். அவருடைய நம்பிக்கையைப் பற்றி இங்கு சர்ச்சை செய்யவேண்டியதில்லை. இவ்வளவு உண்மையான மனிதரை ஆரிய ஆட்சியாளர்கள் எப்படி நடத்தினர்கள், நடத்துகிறார்கள் என்றதான் இங்கு கவனிக்கவேண்டும். திரு.காமராஜைச் சுற்றியிருந்த கூட்டத்தினர் அனைவரும் அவரைக் கைவிட்டுவிட்டார்கள். போதும்போதாததற்குக் காந்தியும் வந்தார்; ராஜாஜியை ஆசீர்வாதம் செய்தார். படேலும், ராஜாஜி விண்ணப்பதாரர்களுக்குச் சலுகை காட்டினர். இன்னும்கொஞ்சகாலம் கழித்து நேருஜி விஜயம்செய்து எலக்ஷன் பிரசாரம் செய்வார். எலக்ஷன் செலவுகளுக்கு பிர்லாஜி பணம் கொடுப்பார். இவ்வளவு

அடுத்த பக்கம் பார்க்க

## புராண கால

3-ம் பக்கத் தொடர்ச்சி

மின்றி மிகஎளிதாக நிறைவேற்றிக் கொடுக்கப்பட்டிருக்கிறது.பஞ்சத்தைப்போக்க இவ்வளவு பக்குவமான வழியை "நமது முன்னோர்கள்" செய்து காட்டி இருக்கவும், அதைப்பின்பற்றாமல், நம் தலைவர்கள் ஏனோ நாடுபலசுற்றுப்பயப்புரை பலபேசி களிகின்றனர்?

இந்த 'உண்மையை' இப்போது உணவுக்காக வெளிநாடுகளுக்குப் போயிருப்பவர்கள் ஒருக்கால்தெரியாமல் இருந்தாலும், பெரியபுராணத்தை ஒருமுறைக்கு ஆறுமுறை திருப்பித் திருப்பிப்படித்த பண்டிதர்களாவது, அவர்கள் உணவுக்காக வெளிநாடுகளுக்குப் போவதைத்தடுத்து, இந்த நுட்பமான முறையைச் சொல்லிக் கொடுத்து அதன்படி செய்யச்சொல்லி இருக்கலாம். ஒருக்கால், அவர்கள் அங்ஙனம் செய்வதற்கு, அவர்களிடத்தில் உண்மையான கடவுள் பக்தி இல்லை; ஆகவே அவர்களால் அந்தக் காரியத்தைச்செய்ய முடியாதென்று, 'உண்மையான கடவுளன்பர்களான' புராணப்பண்டிதர்கள் கருதுவார்களானால், உணவுக்காக வெளிநாடுகளுக்குச் செல்லும் தலைவர்களை மறித்து, "ஏனோ உங்களுக்கு இத்தொல்லை? பஞ்சத்தைப் போக்க, நஞ்சுண்ட கண்டனும் நானருளைப் பெற்ற நாங்கள் இங்கிருக்கிறோம்; அஞ்சற்க" என்று அபயமளித்து, ஆண்டவனை நினைந்த வண்ணம் ஆனந்த நித்திரைசெய்து பொற்காசில்லா விட்டாலும் வெள்ளிக்காசாவது பெற்றுப் பஞ்சத்தைப் போக்கியிருக்கலாம்.போக்க முன்வந்தார்களா? இல்லை. போக்கத்தான் முடியுமா? முடியாது. காரணம் என்ன? புராணப்பாடிய தன் நோக்கம், மக்களின் உண்மையான—தேவையான குறைகளை நீக்கி அவர்களை நல்வழியில் செலுத்துவதற்கன்று. புராணத்தைக் கருவியாகவைத்து, ஒருசிலர் உடலுழைப்பின்றிச் சுகவாழ்வு நடத்துவதற்காக ஏற்படுத்தப்பட்டதாகும். இந்த உண்மை, அப்பரும் சம்பந்தரும் பெற்ற பொற்காசைக் கொண்டு அவர்களைச்சார்ந்த அடியவர்களுக்கு மட்டுமே உணவளித்தார்கள் என்று பெரிய புராணத்திலேயே சொல்லப்பட்டிருப்பதால், இதற்கு ஆதாரந்தேடி வேறெங்கும் போகவேண்டியதில்லை. இன்றும் பெரியபுராணம் போன்ற மத நூல்கள், ஒரு குறிப்பிட்ட சிலருடைய உடலுழைப்பில்லாச் சுக வாழ்வுக்கே பயன்பட்டு வருகின்றன. எந்த நோக்கத்தை அடிப்படையாகவைத்து அந்த நூல்கள் உண்டாக்கப் பட்டனவோ, அந்த நோக்கம் இன்றும் இனிதே நடைபெற்று வருகின்றது.

நாட்டில் பஞ்சம் ஏற்பட்டு, மக்கள் உணவின்றி அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கும் இரங்கத்தக்க நிலைக்கு யாதாயினும், பரிகாரம் தேடவேண்டுமேயென்ற கவலையுடன் நம்மவர் சிலர் வெளிநாடுகளுக்குச் சென்று அல்லற்பட்டுக் கொண்டிருக்கிற இந்த நிலையிலும், ஆனந்த நித்திரை செய்து பொற்காசு பெற்று அடியவர்களின் பசிநோயை மாற்றியதாகச்சொல்லப்படும் பெரியபுராணத்தைக் கருவியாக வைத்துக்கொண்டு ஒரு சிலர், மக்களின் இன்றைய தேவைக்குத் தங்களாலான உதவியைச்செய்யாமல், செய்யும் ஆற்றல் இல்லாவிட்டால் சும்மாவாவது இராமல், தங்கள் சுகவாழ்வுக்கு மட்டுமே வழிதேடிக் கொள்கின்றனர் என்றால், இத்தகையினரை மக்களினத்தில் சேர்ப்பதா? அல்லது வேறு இனத்தில் சேர்ப்பதா?

அமெரிக்காவிலே, சர் இராமசாமி அவர்கள் இந்நாட்டில் ஏற்பட்டுள்ள பஞ்சக் கொடுமையை விளக்கி, அதற்குத் தேவையான உணவுப் பொருள்கள் உதவிசெய்யப்படவில்லையானால், பல இலட்சம் மக்கள் பட்டினியால் மடிய நேரிடும் என்ற ஆபத்தைக் கூறி அதற்கான ஆதரவு தரும்படி விண்ணப்பம் செய்தவண்ணம் இருக்கிறார். இதே சமயத்தில், இங்கே, காஞ்சிபுரத்திற் கருகாமையில் நாலுகல் தொலைவில் கூரம் என்ற இடத்தில் ஒரு பழைய சிவாலயம் இடிந்து கிடக்கிறது. அந்தக் கோயில், செங்கற்களின் அளவுக்குச் சிறித்த சிறிதாக அறுக்கப்பட்ட பளபளப்பான கருங்கற்களால் கட்டப்பட்டது. அப்படிப்பட்ட கோயிலை அழிய விட்டால் நாட்டுக்கே பெரிய ஆபத்துவந்து விடும், ஆகையால் அதனை அழிய விடாது புதிப்பிக்கும்படி புராணப் புலவர் ஒருவர், தமது விண்ணப்பத்தைப் பொதுமக்களிடம் கூறி வேண்டிக்கொள்ளுகிறார்.மக்களுக்கு ஏற்பட்ட பஞ்சத்தைப்போக்கப் பரமனிடம் பொற்காசு பெற்ற புராணக்கதையை நம்பும் புலவர்தான், இப்போது அதே பரமனுக்கு ஆலயம் எடுக்க மக்களிடம் பொன் கேட்கிறார். இதென்ன கோலம்? மக்களின் பசிக்கொடுமையைக் கண்டு சகியாமல், தன்னிடமுள்ள பொருளையெல்லாம் பொற்காசுகளாக அள்ளி அள்ளிக் கொடுத்த அனையான ஆண்டவன், இப்போது தான் குடியிருக்கும் ஆலயம் பாழடைந்து, அதனைப்புதிப்பிப்பதற்கும் பொருள் இல்லாமல், தன்னுடைய பக்தனை புலவர் வாயிலாக மக்களிடம் விண்ணப்பம் செய்துகொள்ளுகிறானென்றால், இது எத்தனை 'இரங்கத் தக்கதாய்' இருக்கிறது பாருங்கள்!

இனி, அப்பரும் சம்பந்தரும் நாட்டில் ஏற்பட்ட பஞ்சத்தைப் போக்குவதற்காகப் பரமனிடம் பொற்காசுபெற்றகாலம் எந்தநிலைமையில் இருந்ததென்றால், நாட்டில் மழையில்லை; அதனால் காவிரியாற்றில்நீர் இல்லை; அதனால் வயல்களில் விளைச்சல்இல்லை; அதனால் மக்கள் பசிநோயால் தாக்கப்பட்டனர் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் பொற்காசு கிடைத்தவுடன், வேண்டிய அரிசியும் பிறஉணவுப் பொருள்களும் அதேஊரில் தாராளமாகக் கிடைத்தனவாம்.இப்போது,இங்கு மழையில்லை; அதனால் விளைச்சல் இல்லை; எனவே உணவுப் பொருள்கள்கிடைக்கவில்லை. பல ஆயிரம்கல் தொலைவுக்கு அப்பாலுள்ள நாடுகளிலிருந்து உணவுப் பொருள்கள் எதிர்பார்க்கப்படுகின்றன. ஆனால், அன்றைய பஞ்சமும், இன்று ஏற்பட்டுள்ளதுபோல் மழையின்மையால்ஏற்பட்டதுதான். என்றாலும், அன்று,பணம்கொடுத்தவுடன் உணவுப்பொருள்கள் தாராளமாகக் கிடைத்தனவாம். அதுவும், எந்த ஊரில் பஞ்சம் ஏற்பட்டிருந்ததோ, அதேஊரில்தான் பணம் கொடுத்தவுடன் 'வேண்டிய உணவுப்பொருள்கள் வேண்டியபடி கிடைத்தன வாம். சிவனடியார்கள் பொற்காசைக்கொடுத்தவுடன்

"வேண்டுவன நாம் தருவோம்" என்றுகூறி அவ்வூர்வணிகர்கள் தாராளமாக உணவுப் பொருள்களைக் கொடுத்தனராம். மழையின்மையும், அதனால் காவிரியாற்றில்நீர்வராமையும், அது காரணமாக விளைச்சல் இன்மையும் ஏற்பட்டு எந்தநாட்டில் பஞ்சம்உண்டாயிற்றோ, அதேநாட்டில் பணம்கொடுத்தவுடன் உணவுப்பொருள்கள் தாராளமாகக் கிடைத்தனவென்றகூறுவது விந்தையினும் விந்தையாதவன்றோ இருக்கிறது. அற்றன்று. அவ்வூரில் பஞ்சம் ஏற்பட்டதால், உணவுப்பொருள்கள், பஞ்சம் ஏற்படாத நாடுகளிலிருந்து வரவழைத்துக் கொடுக்கப் பட்டன என்று கொள்வதற்கும் இல்லையே! ஒருக்கால் அதனை உண்மையென்று கொண்டாலும், அப்பரும் சம்பந்தரும் அவ்வூருக்கு வந்து பொற்காசு பெற்றுப் பஞ்சம் தீர்க்கும் வரையில், அவ்வூரவர்கள் வாளா இருந்தது காரணமென்ன? பஞ்சம் ஏற்படாத ஊர்களிலிருந்து உணவுப் பொருள்களை வரவழைக்கக் கூடிய வசதி யிருந்திருந்தால், அப்பரும்சம்பந்தரும் வந்து ஆனந்த நித்திரை செய்து ஆண்டவனிடம் பொற்காசு பெறுவதற்கு முன்னடியே தங்களுக்கேற்பட்ட பசிநோயை மாற்றியிருப்பார்களே! அங்ஙனம் செய்வதற்கு அவ்வூரவர்கள் எவரிடமும் பணம் இல்லாமல் இருந்ததா? பணம் இல்லாமல்இருந்தது உண்மையென்றால், அவ்வூர் வணிகர்கள் எப்படி வெளியூர்களிலிருந்து உணவுப் பொருள்களை வரவழைக்க முடிந்தது? அப்பரும் சம்பந்தரும் ஆண்டவனிடமிருந்து பெற்ற பொற்காசுகளைக்கொண்டு உணவுப் பொருள்களை வரவழைத்தார்கள் என்று சொல்வதற்குமில்லையே! அவர்களுக்குக் கிடைத்த பொற்காசு, ஒரு நாள் உணவுக்கு வேண்டிய அளவுக்கு மட்டுமே ஆண்டவனால் அன்றாடம் கொடுக்கப்பட்டு வந்ததாகப் புராணத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அன்றாடம் கொடுத்த பொற்காசைக் கொண்டு அன்றாடம் வேண்டிய உணவுப்பொருள்களை அன்றாடமே வரவழைக்கக்கூடிய, அவ்வளவு அண்மையான ஒரு ஊரில் பஞ்சமில்லாது விளைபொருள்கள் இருந்திருக்க வேண்டுமே! அப்படிஇருந்திருக்குமானால், மழையின்மையாலும், காவிரியாற்றில் நீர் வராமையாலும் ஏற்பட்டபஞ்சம் திருவீழிமிழலையைப்பட்டும் எப்படி பாதித்திருக்க முடியும்! காவிரியாற்றில் நீர் வராமையால் ஏற்பட்ட உணவுப் பஞ்சம், திருவீழி மிழலையை மட்டும் தனியாகப் பாதிக்க முடியாது; காவிரியாறுபாய்கின்ற ஊர்கள் எல்லாவற்றையுமே பாதித்திருக்கும். எனவே, திருவீழிமிழலைப் பஞ்சத்திற்கு, அதற்குப்பக்கத்திலுள்ள ஊர்களிலிருந்து உணவுப் பொருள்கள் வரவழைக்கப்பட்டன வென்பதும் ஒப்புக்கொள்ளக்கூடிய நிகழ்ச்சியாக இருக்க முடியாது. அன்றியும், காவிரியாற்றுப்பாய்ச்சலுக்கு அப்பாற்பட்ட தொலைவிலுள்ள வேறு ஊர்களில் இருந்து அன்றாடம் வரவழைக்கக் கூடிய துரிதமான போக்கு வரத்து வசதியும் அக்காலத்தில் இல்லை.

எனவே, இப்பஞ்ச நிகழ்ச்சி பெரியபுராணத்துள் நுழைந்த புதுமைதான் என்ன? அப்பர் சம்பந்தர் முதலான சைவசமய ஆசிரியர்களுக்குச் சிவனரின் அருட்டிறம் இருக்கிறதாகக் கற்பித்து, அழிந்து போன சைவத்தை மீண்டும் புதிப்பிப்பதற்காக, இத்தகைய புதுமைகளைப் புராணங்களில் நுழைத்து, அவற்றை மக்கள் நம்பும்படி செய்தனர் என்பதைத்தவிர, இதில்வேறு யாதாயினும் உண்மை இருக்கமுடியுமா என்பதனை வாசகர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

---

**சென்னை 2-வது சர்க்கில்**
**1-வது திராவிட மாநாடு**

17-3-46 ஞாயிறு காலை 8-மணிக்கு

தோழர் N. V நடராஜன் அவர்கள் தலைமையில் நடைபெறும்

பெரியாரும் மற்றும் தோழர்கள் பலரும் மாநாட்டில் கலந்துகொள்வர்.

---

## சிந்தித்துப் பாருங்கள்

5-ம் பக்கத் தொடர்ச்சி

'ஜி' களையும் சாதாரண திரு. காமராஜ் எதிர்த்து நிற்கிறார். அவருக்கு வெற்றி கிடைக்கட்டும்.

நிற்க, நமது கடமைஎன்ன? பிரிட்டிஷ்ஏகாதிபத்தியத்தை வீழ்த்துவதற்குஇதுதான் தகுந்தசமயம். இந்தச் சந்தர்ப்பத்தை இழந்துவிடக் கூடாது. ஆனால்,பிரிட்டிஷார்வெளியேறியபின்றபடியும் ஆரிய ஆட்சி நம்தலையில்ஏறி உட்காராமலும்பார்த்துக்கொள்ள வேண்டும். இதுமிகவும் எக்கச்சக்கமான நிலைமை. இந்த நிலைமையை ஒட்டித்தான் வரப்போகும்தேர்தல்களையும்,வருங்கால நிலைமையையும் ஆராயவேண்டும். திராவிட கழகம் தேர்தலில் கலந்துகொள்வதில்லை என்று தீர்மானம் செய்தவுடன், எனக்குக் கொஞ்சம் கலக்கமாயிருந்தது. ஆனால் இக்கட்டுரையில்எழுதியுள்ள விஷயங்களை எல்லாம் மனதிற்குக் கொண்டு வந்தவுடன், திராவிடகழகத்தின் முடிவுதான் மிகவும் தகுதியானது என்று தீர்மானித்தேன். எலெக்ஷனுக்குச் செலவு செய்ய நம்மிடம் பணமில்லை. காங்கிரஸ் முதலாளிகளுடன்நாம் பணப்போட்டி இட முடியாது. இரண்டாவதாக, நமது ஸ்தாபன அமைப்புஇன்னும் பலப்படுத்தப்பட்டு தேர்தலில் போட்டியிட ஏராளமான கிளைகளுள்ள அமைப்பை ஏற்படுத்த வேண்டும். தேர்தல் முடிந்தபின் காங்கிரஸ்தான் மந்திரிசபை அமைக்கும். காங்கிரஸ் மந்திரிசபை திராவிடமக்களை நசுக்க முயன்றால், வெளியே இருந்து நாம் போராட்டத்தை நடத்தலாம். சட்டசபையில் எதிர்க் கட்சியினராக இருந்தால்தான் நம் குறைகளை எடுத்துக்கூறலாம் என்ற நினைப்பது தவறு. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைஒழிக்கவும், ஆரிய ஆட்சியை வீழ்த்தவும் நாம் போராட வேண்டியிருக்கும். ஆகவே, தற்சமயம் நாம் செய்யும் வேலை, பிரசாரம்செய்தல்,போராட்டத்திற்குத் தயார் செய்தல், கட்சி அமைப்பு. இவ்வேலைகளைத்திராவிட கழகம் தீவிரமாகச்செய்து வருகிறது. கட்சியின் தீவிரநோக்கங்களைக்கண்டு பயந்தவர்களும், கட்சியின் பேரால் சுயநலத்தைக் கருதுகிறவர்களும் இப்பொழுதுதிராவிட கழகத்தில்இல்லை. ஆகவே, போராட்டம் ஏற்படின் வெற்றி எதிர்ப்பார்க்கலாம்; எல்லோரும் வேலை செய்வோமாக.







## அடிமையை ஒழித்த

2-ம் பக்கத் தொடர்ச்சி

ளும் அவாவுடையவனானன். லிங்கன் எங்கு சென்றாலும்வேறுஎதற்காக அல்லாவிட்டாலும் அவன் சொல்லாற்றலைக் கேட்கும் விருப்போடு மக்கள் அவனைச் சுற்றிக் குழுமிவிடுவார்கள். அவன் சொல்லிலுள்ள சுவையைக்கண்டு மகிழவந்த மக்கள் கருத்தைப்பற்றியும்சிந்திக்கத் தொடங்கினார்கள். லிங்கனுக்குஅவனது சுற்றுச்சார்பில் ஒருவித மதிப்பு வளர்ந்தது.

ஆபிரகாம் லிங்கனை இருபத்தோராவது ஆண்டு தழுவும் நிலையில் அவன் தந்தை தன் சிறுதோட்டத்தையும் விற்றுவிட்டு இண்டியானாவிலிருந்து இல்லினாய்ஸ் என்றமண்டலத்திற்குப் புறப்பட்டார். வீட்டுச்சாமான்கள்நிறைந்தவண்டியை லிங்கனே வெறுங்காலோடு வெகு தொலைவிற்கு இழுத்துச் சென்று குடியேறத்தக்க புதிய நிலத்தைக் கண்டு அங்கே குடும்பத்தோடு தங்கினான். புதிய சுரப்புநிலத்தை லிங்கனும் அவனது இளவலும் நன்கு உழுததோடு, 15 ஏக்கர் சுற்றளவுக்கு வேலிகட்ட லிங்கனே மரத்தைப்பிளந்து வரிச்சுக்கட்டினான்.

ஓயா உழைப்பு லிங்கனை எஃகு உடம்பாக்கிற்று.லிங்கனின்வலிமை மக்கள் எடுத்துக்காட்டுக்குரியவலிமையின் எல்லையை அடைந்தது. மரம் பிளப்பதிலும், கதிர்பிடுங்குவதிலும், அலைகளை அடிப்பதிலும், லிங்கனுக்கு நிகரானவர் எவரும் இல்லை. ஆண்டு வளர வளர அறிவு கொளுத்தும் நூல்களைப்படிப்பதில் லிங்கனுக்கு அவா மேலிட்டது. வேலைநேரம்போக எஞ்சியநேரத்தில் மரநிழலில் தங்கி ஏட்டிலே எண்ணத்தை இருத்துவான். ஆண்டுக்குமேல் அறிவு வளர்ந்தது, ஆனால் அவனுக்கு உரிமை உடையது என்று சொல்ல ஒன்றுமில்லை. கையில் பொருளில்லை என்றாலும் பலமைல் நடந்துசென்று கடனாக நூல்களை வாங்கிவந்து படித்தான். அதற்கிடையில் கொல்லத் தொழிலுங்கற்றுத்தேர்ந்தான்.

இல்லினாய்ஸில் வாழத்தொடங்கிய ஆறுதிங்களுக்குள் தன்வாக்குவன்மையால் மக்களின் அன்பைக் கொள்ளைகொண்டான். அவ்வன்பின்விளைவினால் மண்டல ஆட்சி மன்றத்திற்கு ஒரு உறுப்பினனாக லிங்கன் நிறுத்தப்பட்டான். மிகச்சில வாக்குறுதிகளால் தோற்கடிக்கப்பட்டான். என்றாலும் இரண்டாண்டில் பெரும்பான்மைவாக்குகளால் வெற்றிபெற்று ஆட்சிமன்றம் ஏறும் நிலை எய்தினான். மன்றம் ஏறுங்கால் மக்கள் மதிக்கத்தக்க ஆடைஅணிந்துகொள்ளவேண்டித் தேவையான பொருளைத் தோழர்களிடம் கடனுக்குப் பெற்றான். காட்டிலே திரிந்து வந்த லிங்கன் நாட்டு மன்றத்திலே நடமாடத் தொடங்கிய சிறிது காலத்திற்குள் மக்களின் மதிப்பைச் சமாளிக்க முடியாத அளவுக்குப்பெற்றான்.அவனுடைய சொல்லாற்றலால் சோர்வுற்றிருந்த மக்களின் உடைந்தஉள்ளத்தில் உணர்ச்சியைத் தெளித்து, எண்ணங்களை எழுப்பிக் கருத்துகளைப்பூக்கச்செய்து, மனித உரிமை வேட்கை என்னும் மணத்தைக்கமழச்செய்தது. லிங்கனின் திறமை படித்தவரையும், பாமரரையும் தியங்க வைத்தது. பிரபுக்களோ வேறு எதற்காக அல்லாவிட்டாலும் இயக்க முன்னேற்றங் கருதி லிங்கனைப்போற்றும் இன்றியமையாமையில் இருந்தார்கள். இந்த நிலையில்லிங்கன் தன்தோழனிடம் நில அளவை நூல்களைக் கடனுக்குவாங்கிப்படித்துத் தேர்ச்சி பெற்று நில அளவையாளனாகத் தொழில்புரியத் தொடங்கினான்.

லிங்கனின் புகழ் முகிலைக் கிழித்தெழும் முழுமதியின் குளிர்போல் எங்கணும் பரவத் தொடங்கிற்று. அவன் தன்எல்லாச்சொற்பொழிவுகளிலும் எடுத்தோதி வந்த இரு பெரும் பொருள்கள் 'அடிமை' 'குடி' என்பவையாகும். அந்தக் காலத்தில் அமெரிக்கா, ஆப்பிரிக்கா நாட்டு நீக்ரோவர்களைக் கப்பலேற்றிக்கொண்டுவந்து அடிமை வாணிபம் நடத்திவந்தது. மக்களின் மனநிலையை அறிந்த லிங்கன் அடிமைப்படுத்தும் மனப்பான்மையின் கொடுமையையும்உணர்ந்தான்.வறுமையின் நிலையையும், உழைப்பின் தன்மையையும் உழைப்பினால் உருமாறிய ஆபிரகாம் லிங்கன் எப்படி உணராமல் இருப்பான்! உணர்ந்தான். உள்ளங்குமுறிற்று குமுறிய உள்ளம் தீப்பொறிகளைக்கக்கியது. அத்தீப்பொறிகள் மற்ற மக்களின் உள்ளத்திலிருந்த அடிமையாகும் மனப்பான்மையைத் தீய்த்தன. அடிமையை ஒழித்த அஞ்சாநெஞ்சன்என்ற பெயரெடுக்கப்போகும் ஆபிரகாம் லிங்கன் தனக்கு அப்பெயர்வரும் என்பதை எப்பொழுதும்நினைக்கவில்லை.

ஆட்சி மன்றத்தில் உடன் உறுப்பினராக இருந்ததோழர் ஒருவரின் தூண்டுகோலின்பேரில் லிங்கன் சட்டப்படிப்பும் படிக்கத்தொடங்கினான். மறுபடியும் ஏடுகள் கடன் வாங்கிப்படிக்கும்படி ஏற்பட்டது. அதற்காக ஒருநாள் இருபத்திரண்டு மைல் தொலைவு நடந்துசென்றுஒரு வண்டி சட்ட நூல்களை வாரிக் கொண்டு இரவுக்குள் கால் நடையாகத்திரும்பினான். வரும் வழியில் ஒருபுத்தகத்தின் நாற்பது பக்கங்களைப்படித்து மனப்பாடமும் பண்ணிவிட்டான். அவ்வளவு விருப்பம் இருந்தது அவனுக்குப் படிக்க வேண்டுமென்பதிலே. லிங்கனின் வாழ்நாளை இருபத்தேழு ஆண்டுகள் கொள்ளைகொண்டு இருபத்தெட்டாம் ஆண்டு கொள்ளை கொள்ள ஆரம்பித்தது. நிலஅளவைத் தொழிலோடு வக்கீல் தொழிலும் நடத்த லிங்கன் நகரத்திற்குச் சென்றான். அங்கேயும் பொருள்தார நெருக்கடி பிடர்பிடித்துந்தியதால் தோழன்ஒருவன்வீட்டில்படுக்கை ஒன்று இரவலாகப்பெற்றுவாழ்ந்து வந்தான்.வறுமை அவனைத்தோழமை கொள்வதினின்றும் சற்றும் விலகவில்லை. இப்பொழுதும், லிங்கன்கிழிந்த அழுக்குப்படிந்தஆடையுடன், தாள்கள் நிறைந்த தொப்பியோடு நீண்டுவளர்ந்த ஒல்லியான உருவத்துடன் தோற்றமளித்தான். என்றாலும் "உண்மை ஆபிரகாம்" (Honest Abe) என்ற பெயரெடுத்தான். தான் சம்பாதித்த முதல் பெருந்தொகையைக் கொண்டு தந்தை விற்ற தோட்டத்தை மீண்டும் உரிமையாக்கிக்கொண்டான், சிலகாலம் கழிந்து மாரிடாட் (Mary Todd) என்ற பெண்ணை மணந்தான். அப்பெண் பிற்காலத்தில் நான்குபிள்ளைகளுக்குத் தாயானாள்.

ஆபிரகாம் லிங்கன் அடிமையை அகற்றத் தன்காலமெல்லாம்கனல் கக்கும் பேச்சுக்களைப் பேசிமக்கள் உள்ளத்தைக் கலக்கிவந்தான். ஒருகால் "உங்களின் சீற்றம் நீதிக் கோட்டையின் சுவர்களைச் சிதைத்துச் சாய்த்துவிடாது, அடிமை பொறுக்கமுடியாதபெருங்குற்றம், இந்தஉண்மையை மறுப்பதுடன், பிறந்தாரையும் உடன்பிறந்தாரையும் சேர்ந்து வாழ வொட்டாமல் பிரிந்துவாழ ஏது செய்யும்; ஒருகுடிச் சண்டையின் கொந்தழலைக்கொழுந்து விட்டெரியச் செய்யும்; அது நாட்டின் கெடுவது காட்டுங்குறியாக முடியும். அடிமை கொடுமை என்பதை எண்ணிச் செய்யாத எந்த உடன்படிக்கையும், எந்த அரசியல் ஏற்பாடும் நீண்ட நாட்களுக்கு நின்று நிலவ முடியாது" என்று உணர்ச்சி ததும்ப எடுத்துக் கூறினான். இவ்வாறு லிங்கன் பேசியது அவன் இயக்கத்திலிருந்த சிலருக்குப் பிடிக்கவில்லை. காரணம் அடிமை ஒழிக்கப்பட வேண்டும் என்று லிங்கன் அஞ்சாது எடுத்துக் கூறுவது இயக்கம் நிற்குச்சேர்தலிலே வெற்றி பயக்காது என்ற அந்த நாட்டில் அக்காலத்திலிருந்த சாய்வு நாற்காலிகள் கூறின.எண்ணியதை எடுத்து கூறாமல் இருக்க லிங்கன் இணங்கவில்லை. சென்ற விடமெல்லாமல் சோர்வின்றிச் சாடினான் அடிமை மனப்பான்மையை. லிங்கன் துணிவுகொண்ட அளவுக்கு அமெரிக்க நாட்டுச் செய்தித்தாள்கள் லிங்கன் சொற்பொழிவை வெளியிடத் துணிவு கொள்ளவில்லை. மறைத்தேவந்தன என்றாலும், மக்களின் உள்ளத்தே வழுந்த எழுச்சிவெள்ளம், லிங்கனின் அறிவுரைகளை வாரி எடுத்து அடித்துக்கொண்டு போயிற்று. லிங்கனின் சொற்பொழிவு என்றவுடனே மக்கள் கடல்போல் திரண்டுவிடுவார்கள். இறந்த தாயின் உடலைத் தந்தையும் பிள்ளையும்தாங்களே செய்த சவப் பெட்டியில் உடன்வர வேறுஎவரும் இன்றித் தூக்கிச் சென்று புதைகுழியிலே கண்ணீர் விட்ட ஒன்பது ஆண்டு லிங்கனுக்குத், தன் நாற்பத்தொன்பதாவது ஆண்டிலே அடிமையை அகற்ற எண்ணிவிட்ட கண்ணீரைக் கையேந்தவும், சொன்ன சொல்லைச் செவியேற்கவும் ஆயிரக்கணக்கான மக்கள் ஆங்காங்கு திரண்டார்கள். நாட்டின் நிலையை நேரில் கண்டான்லிங்கன்.கனிரசம் பருகிக் கனிமொழிபேசிக் கோமள வல்லிகளோடு ஆடரங்கு நடத்தும் மேன்மாடிச் சாளரத்தின் வழியாக நாட்டைக் கண்டானில்லை. அவன்கையும்தோளுமே அவனுக்கு நாட்டின் நிலையை நவின்று நின்றன. கண்டதை மக்களிடத்தே விண்டான். செவிமடுத்த மக்கள் சிந்திக்கத் தொடங்கினார்கள். லிங்கன் கொளுத்தியதீ அமெரிக்காவின் திக்கெட்டும்பரவிற்று. அடுத்து வரும் தேர்தலில் அடிமையை அகற்றப்பாடுபடும் அறிஞனே குடியரசுத்தலைமைப்பீடத்தில் ஏற்றப்படுதலுக்குரியதகுதியுடையவனாவான் என்ற நிலை ஏற்பட்டது லிங்கனின் கட்சியார் லிங்கனை குடியரசுத்தலைமைப் பதவிக்கு நிறுத்தினார்கள். லிங்கன் வென்றான், வெற்றி மாலைசூடினான். வெறுங்காலோடு இல்லினாய்ஸ் நுழைந்த லிங்கன் வாகை மாலைசூடி வாஷிங்டனிலேவெள்ளைமாளிகையில் வாழும் நிலைக்கு ஏற்றம் பெற்றான். லிங்கனின் வெற்றியைக் கொண்டாடியமக்கள் லிங்கனின் பெயர் பொறித்த கொடியை முப்பது ஆண்டுகளுக்கு முன் தன் தந்தையின் தோட்டத்திற்கு வேலி அமைக்க லிங்கனே வெட்டிய வரிச்சுக்கழிகளில் இரண்டைக்கொண்டுவந்த அவற்றினாலே ஏந்திநின்றார்களாம். வெற்றிபெற்ற லிங்கன் வாஷிங்டனிலே நுழைய முடியவில்லை. காரணம்வாஷிங்டன் எதிர்க்கட்சியாரின்கோட்டையாக விளங்கியது. மக்களை அடிமைப்படுத்தி ஆணவ ஆட்சிசெலுத்திவந்த உலுத்தரின் உல்லாச புரியாகத் திகழ்ந்தது வாஷிங்டன். ஏர்பிடித்த உழவன் ஏழைகளின் தோழனைக் கோலேந்தச் சென்றபொழுதுமாற்றார் கொலை செய்ய முயன்றார்கள். முயற்சி பலிக்கவில்லை. எதிரியின் கூடாரத்தில் குடியரசுத் தலைவன் லிங்கன் நுழைந்தான். கமழுதலற்ற கனகாம்பரங்கள் நிறைந்த பூங்காவிலே காட்டுமுல்லை முறுவல் செய்யத்தொடங்கிற்று. காட்டுமுல்லையின் மணத்தின்முன் கனகாம்பரங்கள்மங்கின. கனகாம்பரங்களின் நடுவே காட்டுமுல்லை,சீமான்களின் நடுவே லிங்கன். லிங்கன் ஆட்சிபீடம் ஏறியபிறகு தன்உள்ளத்தில் எப்பொழுதும்குமுறுதலைச்செய்து கொண்டிருந்தஅடிமையைச்சட்ட மூலம் அகற்ற முயன்றான். உலகில் எந்தத்தலைவனும்அதுகாறும்செய்ய நினைக்காத செயலைச் செய்து முடிக்க முதலில் எண்ணினான். உடனே நாடெங்கும் அமளி ஏற்பட்டது. அடிமையை ஒழிக்க முயன்ற லிங்கனுக்கு அமளியை அமைதிப்படுத்த வேண்டிநேரிட்டது. அமளி உள்நாட்டுச்சண்டையாக மாறிற்று. அடிமையை வெறுத்த வடமண்டலங்களும் அடிமையைஆண்டதென்மண்டலங்களும் களங்களிலே மோதத்துவங்கின. வடமண்டலத்தாரின் புகழ்க்குரிய வீரனாக லிங்கன் விளங்கினான் என்றாலும், தன்னழைக்குடிமக்கள் களத்திலே மடிவது கண்டு கண்ணீர் சொரிந்தான். லிங்கனின் இருதயம் இரும்பினாலானதல்லவே. அதுதான் சீமான்களுக்குமட்டுமே சொந்தமாயிற்றே. இந்த நிலையில் அடிமை ஒழிப்புச்சட்டத்தை அஞ்சாநெஞ்சுடன் வெளிப்படுத்தினான்

(அடுத்த பக்கம் பார்க்க)

# திருப்பரங்குன்றிலே திரிபுரா

—( பாரதி )—

திரிபுராவில் நடந்த காங்கிரஸ் தலைவர் தேர்தலிலே திராவிட மங்கோலியத் தீரன் சுபாஷ் சந்திரபோஸ், ஆரியவீரன் பட்டாபி சீதாராமையாவுடன் போட்டியிட்டார், வெற்றி பெற்றார். ஆரியர் நெஞ்சு கொதித்தது. கண்கள் கோபக் கனல் கக்கின. வாய் சாபக்கணை விடுத்தது. ஆரிய மதக்காப்பாளர் காந்தியார், "பட்டாபி தோல்வி, என் தோல்வி" என்று பட்டவர்த்தனமாக அறிக்கை விட்டு அபயமளித்தார்.

வீரன்போல்போஸ்ராஜினாமாசெய்தார். வேறு கட்சி அமைத்தார் "முன்னேற்றக் கட்சி" என்பது அதன்பெயர். அதைத்தான் ஆச்சாரியார் "ஓட்டைப்படகு" என்று வருணித்தார்.

திராவிடவீரன் போஸைத் தோற்கடிக்கக்கூட்டு முன்னணிஅமைத்துஅன்று செய்த சூழ்ச்சியிலே வெற்றி பெற்றனர், ஆரிய சிகாமணிகளாகிய காந்தியாரும், ஆச்சாரியாரும். இருவரும் இணைபிரியா நண்பர்கள், பழைய சகாக்கள். அன்று மட்டுமென்ன என்றுமே அப்படித்தான்.

போஸ் நேதாஜியாகி "ஜே ஹிந்த்" கோஷம் தந்தார். வந்தேமாதர வாதிகளுக்கு நெஞ்சு வாதித்தது. "வந்தே மாதரமிருக்க, ஜேஹிந்த் வேண்டாம்" என்றார் ஆச்சாரியார் "வேண்டுமானால் வந்தேமாதரத்துக்கு அடுத்தபடியாக வைத்துக்கொள்ளலாம்" என்று ஒத்துப்பாடினார்.

ஹரிஜனங்களுக்கு ஆலயங்களை (வெளிக்கதவுகளை, உட்கதவுகளை அல்ல. மூலஸ்தானத்தை அல்ல.) திறந்துவிட்டார் ஆச்சாரியார். அந்தக்கோயிலிலே சாமி தரிசனம் செய்ய யாத்திரை மேற்கொண்டார் காந்தியார்.

இவ்வாறு இவர்கள் இருவரும் ஒருவரையொருவர் சார்ந்தேஎன்றும்நடந்துகொள்வர். எனினும் சில சமயங்களில் அபிப்பிராயபேதம் கொண்டதாக வெளிப்படுத்துக்கு அறிக்கைகள் வெளியிடுவர். "காந்தி வாக்கு வேத வாக்கா" என்பார் ஆச்சாரியார். "ராஜாஜி செய்கை எனக்குப்பிடிக்கவில்லை" என்பார் காந்தியார். ஆனால் சமயம் நேர்ந்தபோதுஇவர் அவர் துணை நாடுவார். அவர் இவரைக் காக்க வருவார். இருவரும்சேர்ந்துஎதிரிகளைச்சாடுவர், சதிசெய்து வீழ்த்துவர். அசல் ஆரியப்பண்பு.

இந்த அபூர்வஜோடி சமூக அரங்கத்திலே சம்பந்திகளாகிவிட்டனர். அரசியல் அரங்கத்திலே இடைவிடாமல், சதிகளும், தமாஷ்களும் நடத்திக்கொண்டு வருகின்றனர். ஆச்சரியகரமாகச்சிலவெற்றிகளும் பெற்றுவருகின்றனர். ஆனால் அறிவுக்காலமாகிய இக்காட்களிலே அவர்கள் சூழ்ச்சிகள் வெளிப்படத் தொடங்கிவிட்டன; வீழ்ச்சி தூரத்திலில்லை என்பதை அவர்கள் அறியமாட்டார்கள்.

அன்று ஒருபோஸை வீழ்த்தினார்கள். இன்று ஒருகாமராஜை வீழ்த்திவிட்டார்கள்.

தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவர் காமராஜ். திராவிடவீரர் ஆகஸ்ட் தியாகிகளாகிய ஊழியர்களைத்திரட்டினார் திருப்பரங்குன்றத்திலே, ஆச்சாரியார் 'ஒழிக' என்று கோஷித்தார், தீர்மானமும் நிறைவேற்றினர் துணிந்து.

ஆனால் ஜ-ன்—ஜ-லை தியாகிசும்மா இருப்பாரா? தமது பரம்பரைச் சொத்தான சூழ்ச்சியைக் கையாண்டார். ஆஸாத்துக்குக் கடிதம் எழுதிக் காங்கிரஸில் நுழைந்தார். திருச்செங்கோட்டிலே தேர்தல் நடத்தி மாகாணக் காங்கிரஸ் கமிட்டி மெம்பரானார். இந்தப் "புழக்கடை" முறையை ஆட்சேபித்தார் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தலைவர்.

கேவலம் ஒருகாமராஜ் எதிர்ப்புக்கு ஆச்சாரியார் அடங்குபவரா? தனதுகை வரிசையைக் காட்டினார். காமராஜ் தலையை "கல்கியைக்" கொண்டு சின்னத் தலையாக்கினார். தனது சகபாடி காந்தியாருக்கு ஓலை விடுத்தார்.

இவற்றையெல்லாம் இதுவரை தூரத்திலிருந்தே கண் காணித்து வந்த காந்தியார் அசப்அலியை விடுத்தார். "கோடு செல்லும் குன்றம் செல்லாது" என்று அவர் தீர்ப்பளித்துச் சமரசம் செய்து வைத்தார். சர்தார் பட்டேலும் சம்மதம் அளித்தார். ஆயினும் தமிழர் உள்ளக் கொதிப்பு அடங்கவில்லை. ஆகவே தனது சகாவுக்கு ஏற்பட்ட அபாயத்தை நீக்கி அபயமளிக்கஅண்ணல் காந்தியார் "ஹரிஜன் யாத்திரை" மேற்கொண்டார் தமிழ் நாட்டுக்கு.

"கோடு செல்லும் குன்றம்செல்லாது" என்று அசப்அலி தீர்ப்பளித்த அன்றே காமராஜ் ராஜிநாமாச்செய்திருக்கவேண்டும். ஆனால் காந்திய மையலிலே கண் மூடித்தன்னை மறந்தலயந்தன்னில் இருந்தார். அந்த முதல் குட்டு அவருக்கு உறைக்கவில்லை. தடவிக்கொடுத்துவிட்டுச்சும்மா இருந்தார்.

சட்டசபைக்கு ஹரிஜன அபேட்சகர் ஜாபிதா தயாரித்துத் தமிழ்நாடு தேர்தல் போர்டு தலைவர் காமராஜ் மத்தியதேர்தல் போர்டுக்கு அனுப்பினார். அதில் ராணிப்பேட்டைத்தொகுதிக்குச்சிபார்சு செய்யப்பட்ட ஊழியரை நீக்கித் தனக்கு வேண்டிய வேறு ஒருவரை நியமிக்கும்படி ஆச்சாரியார் சர்தாருக்கு எழுதினார். சர்தார் பட்டேல் தேர்தல் போர்டை நிராகரித்து ஆச்சாரியார் சிபார்சை ஏற்றுக்கொண்டு உத்தரவிட்டார். இது காமராஜருக்குவடநாட்டார் அளித்த இரண்டாவது குட்டு. இதையும் வரப்பிரசாதமாகவே எண்ணிவாளாவிருந்தார்.

காந்தியார் சென்னைக் கூட்டத்திலே காமராஜை நோக்கி "உங்களுக்குக்கூட இந்துஸ்தானி தெரியாதா" என்று கேட்டார். இந்துஸ்தானி தெரிந்த ஆரியரே தலைவராகஇருக்கலாம். நீங்கள்தலைவராயிருக்க லாயக்கில்லை என்று சொல்லாமற்சொன்னார். இது காமராஜருக்குக் கருணையுடன் கிடைத்த மூன்றாவது குட்டு. இதுவும் தேவாமிர்தம் என்று எண்ணியிருந்துவிட்டார்.

காந்தியார் சென்னையிலிருந்த காலை ஆச்சாரியார்களையே அல்லும் பகலும் அனவரதமும் அரவணைத்துக்கொண்டிருந்தார். காமராஜர்கள் கடைசியென ஒதுக்கப்பட்டனர். ஆங்கிலப் பார்லிமெண்டரி தூதுகோஷ்டியினரும் அவர்களைப்பாராது புறக்கணித்தனர். இது காமராஜ் பெற்ற நான்காவது குட்டு. அதையும் காமராஜ் அவமானமாகக்கருதவில்லை.

காந்தியார் யாத்திரைமுடித்து வார்தா சென்றார். சென்றவர் முதற் காரியமாக ஆச்சாரியாருக்கு வக்காலத்து வாங்கி, 'ஹரிஜன்' பத்திரிகையிலே அறிக்கையொன்று வெளியிட்டார். அந்த அறிக்கையில், 'தென்னாட்டிலே ராஜாஜியைப் பொது ஜனங்கள் போற்றுகின்றனர். ஆனால் ஒரு சிறு கும்பல் காங்கிரஸ் தலைமையில் வீற்றிருந்து அவரைத் தூற்றுகின்றது. ராஜாஜியைப் புறக்கணித்தால் அபாயம் வரும், எச்சரிக்கிறேன்' என்று கூறினார்.

இதுகாமராஜருக்குக் கிடைத்த ஐந்தாவதுகுட்டு. இப்பொழுதுதான் கொஞ்சம் உணர்வுவந்திருக்கிறது. "ஐயோ வலிக்கிறதே" என்று மெல்லச்சொல்லித்தேர்தல் போர்டு தலைமைப்பதவியை ராஜிநாமாச் செய்திருக்கிறார். ஆனால் காங்கிரஸ் தலைமைப்பதவியைராஜிநாமாச்செய்யவில்லை. அதையும் அவர்செய்யாத வரையில், ஆரியக்கூட்டம் சும்மா இருக்கப்போவதில்லை. எச்சரிக்கை ரூபத்தில் குட்டுகள் விழுந்து கொண்டேயிருக்கும்.

வடநாட்டிலே, திரிபுராவிலே(மங்கோயத்திராவிட) வீரன்போஸ்வனப்புமிகுந்த கோட்டையிலே, வானளாவிய வசந்த மாளிகை கட்டினார். காளைகள்கண்களைக் கவர்ந்தஅம்மாளிகை காந்தியார்கண்களை உறுத்தியது. உடனே ஒரு "பட்டாபி தோல்விஎன்தோல்வி" என்றஇடியைஎவி அம்மாளிகையைத்தரைமட்டமாக்கினார்.

தென்னாட்டிலே, திருப்பரங்குன்றத்திலே திராவிடமகன் காமராஜ் திக்கெட்டும்ஒளிவீசும்படி ஊழியர்உதவியால் ஒப்புயர்வற்றஉன்னதமாளிகையையுண்டாக்கினார். அம்மாளிகையின் சிகரங்களிலேயிருந்துவீசியஒளி, குடிசையிலே கோயில் கொண்டுள்ள காந்தியார் மதுரையிலிருந்துஎறிட்டுப்பார்த்த பொழுது அவர் கண்களைக் குருடாக்கியது. உடனே "ராஜாஜிதோல்வி என்தோல்வி" என்ற இடியைஎவினார். அந்தோ! அம்மாளிகையும்சடசட வென்று சரிந்து விழுந்து கொண்டிருக்கிறது.

திரிபுராவீரன்'நேதாஜி'யானார். அன்று தூற்றியவாய்கள் இன்று கூசாது அவரைப் போற்றுகின்றனர். திருப்பரங்குன்றவீரன் என்ன ஆவார்? என்னசெய்வார்?

காங்கிரசிலுள்ள தேசபக்த தமிழர்கள் "காங்கிரஸ் வடநாட்டு ஆரியரின் கைப்பொம்மை" என்பதை இனியேனும்ஒப்புக்கொள்வார்களா? அல்லது குப்புற விழுந்தும் மீசையில் மண் ஒட்டவில்லை என்று வாட்டு ஜம்பம் அடிக்கப்போகிறார்களா? அவர்களுக்கு நாம் கூறுவது இதுவே. "நீங்கள் ஆரியர்களால் எந்தத் துறையிலும் மட்டந்தட்டப்படுகிறீர்கள் என்பதை அறிந்து விழிப்புடன் காரியமாற்றுங்கள். அந்த விழிப்பு ஏற்பட்டுப் போராடி வெற்றிபெறுதவரை நீங்கள் மனிதர்களாக மதிக்கப்படமாட்டீர்கள். சூத்திரனாக—தொழுபவனாக மதிக்கப்படுவீர்கள்."

காந்தியார் சென்னைக்குவந்தது ஆரிய மொழியாகிய இந்துஸ்தானி பிரசாரத்துக்காக. நுழைந்தது ஆரியர்குகையாகிய மீனாட்சி கோவிலின் உள்ளே. ஆனால் திரட்டியது திராவிட ரத்தமாகிய ஹரிஜன் நிதி. தீட்டியது திராவிடரைக் கும்பல் என்று கூறி இழிவு படுத்தும் ஆச்சாரிய ஆதரவுக் கட்டுரை.

மானமுள்ள தமிழர்களுக்குத் தங்கள் சுயமரியாதையைத் தட்டியெழுப்பஇதைவிட வேறு என்ன வேண்டும்?

சுபாஷ் சந்திரபோஸை இழித்துக் கூறிய காந்தியார் வங்காளத்துக்குச் சென்றபொழுது அவர்மீது வெறுப்பு உண்டாயிற்று. கறுப்புக்கொடிகள் காட்டப்பட்டன. (செருப்பும் வீசப்பட்டது) ஆனால் காமராஜை இழித்துக்கூறிய காந்தி நம் நாட்டுக்கு வந்தவுடனே நாம் அவர் காலைக்கழுவி, அந்த நீரைத்தீர்த்தமாக உட்கொள்ளவும் தயாராயிருக்கிறோம், கும்பிடுகிறோம், கூட்டத்திலே கோவிந்த நாமமும், ராம பஜனையும் பாடுகிறோம். இனி அவருக்குக் கோவில் கட்டுவோம். பூஜைகள் செய்வோம். விழா வெடுப்போம். இதுவா மானம்? இதுவா சுயமரியாதை?

காந்திய மையலிலே கருத்திழந்த அன்பர்கள் பதில் சொல்லட்டும்.

'பட்டாபி தோல்வி, என்தோல்வி' என்றும், "ராஜாஜியை எதிர்ப்போர் கும்பல்" என்றும் அணுக்குண்டுகள் வீசுவதுதான் அஹிம்சையா? விசாரணையின்றியே தென்னவர் தீர்ப்பை வடவர் நிராகரிப்பதுதான் சத்தியமா? இத்தகைய ஜனநாயகத்தைக் கைக்கொண்டவர்கள்தான் மகாத்மாக்களா? இந்த மகாத்மாக்கள் நிரம்பியதுதான் ராம ராஜ்யமா?

நெற்றிக்கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே என்று கூறிய நக்கீரர் வழி வந்தவர்கள் என்று பெருமைகொள்ளும் நாம்கோழைகளாகி வடவர் குட்டக் குட்டக் குனிந்து கொடுத்துச்சாணக்கிய டையும் ஈனச்செயலுக்கு இனியும் இடங் கொடுக்கலாமா?

திராவிடநாடு திராவிடருக்கானாலன்றி ஒரு இனம் மற்றொரு இனத்தைஒடுக்கும் கேடு ஒழியுமா?

திரிபுரா—திருப்பரங்குன்றசம்பவங்கள் இதை நமக்குத்தெற்றென விளக்கவில்லையா?

●

## அடிமையை ஒழித்து

7-ம் பக்கத் தொடர்ச்சி

லிங்கன். அதனால் நாற்பது லக்ஷம் மக்களின் அடிமைத்தளைகள் சிதறடிக்கப்பட்டன. உள்நாட்டுச்சண்டையில் வடமண்டலத்தார்வெற்றி பெறவே அமளி ஓய்ந்து அமைதி நிலவத்தொடங்கிற்று. "குடியரசு, மக்களால், மக்களுக்காக ஆன ஆட்சி" என்பதைநிலைநிறுத்தினான் ஆபிரகாம்லிங்கன்.

லிங்கனை வாழ்த்தாத பாட்டாளியின் நாவேகிடையாது. அன்றுலிங்கனுக்கு இருந்த எதிர்ப்பு அவனது உயிரைக்கொள்ளை கொள்ள வட்டமிட்டுக் கொண்டிருந்தது. அமளி அமைதியாக மாறினதின் அறிகுறியாகக்கொண்டாடப்பட்டவிழாவில் கலந்து கொண்டபோது அமெரிக்காவின் ஒப்பற்ற தலைவனான ஆபிரகாம்லிங்கன் கல்லாக்களிடம் ஒருவனால்சுடப்பட்டான். வெறுங்குடிசையிலிருந்து வெள்ளைமாளிகைக்கு முயற்சியால் முன்னேறிய வீரன் வீழ்த்தப்பட்டான். ஆறு அடி நான்குஅங்குலம் உயர்ந்த உருவம் சாய்ந்தது. 1865-ம்ஆண்டு ஏப்ரல் திங்கள்14-ம்நாள் லிங்கனின்உடல் ஏழ்மையின் தோழர்களின் கண்ணீரால் நனைக்கப் பட்டது. வழக்கமாகநாடுதோறும் எளியவர்களுக்காகவாழ்ந்த வீரர்களை அழித்துத் தன் வெறியைத்தணித்துக்கொள்ள உலகிவரும் ஆணவஉள்ளம்படைத்த கூட்டம் லிங்கனையும்அழித்தது. பிரபுக்கள் வீட்டின் ரொட்டித் துண்டிற்குஆசைப் பட்டிருப் பானாயின் அமெரிக்கா ஆபிரகாம் லிங்கனை அறிஞனைக் கண்டிருக்காது, அடிமையாகவேகொண்டிருக்கும். லிங்கன் பெருங்குடிமக்களின்உடைமையை மட்டுமல்லாமல் உள்ளத்தையும் ஆண்டான். லிங்கன்தந்த தங்கக் கருத்துக்கள் மக்கள்மனதிலே இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. லிங்கனின்உடல் கீழேசாயும் போது அவனது கடைசிமூச்சு 'கடமையைச் செய்து முடித்தேன், களிப்புக்கொண்டேன், இனிக்கவலையில்லை' என்றுதான் வெளிவந்திருக்கும். கருத்திற்குப் போரிட்டுக் கடமையைச்செய்து மறைந்த அந்த வீரனின் கல்லறை கற்பிக்கும் பாடம் அதுவாகத்தானிருக்கும்.



Edited Printed and Published by C. N. Annadurai M.A., at "Dravida Nadu" Press, 317—319 Hodgsonpet, Conjeeveram.

